மத்யமர்

சிறுகதைகள்



இந்தியாவின் 75வது சுதந்திர தினத்தை ஒட்டி நடத்தப்பட்ட போட்டியில் தேர்வான சிறுகதைகள்

# என் தேசம்!

தொகுதி 1



நண்பர்களே.!

நம் இந்திய தேசத்தின் பெருமைமிகு 75வது சுதந்திர தினத்தை ஒட்டி, நம் மத்யமர் குழுவில் ‘**என் தேசம்**’ என்ற தலைப்பில் சிறுகதைப் போட்டி நடத்தப்பட்டது. மத்யமர் எழுத்தாளர்களால் 243 கதைகள் படைக்கப்பட்டன.

கதைகளைத் தேர்ந்தெடுக்கும்படி, சிறந்த மத்யமர் எழுத்தாளர்கள் நான்கு பேர் வேண்டிக் கொள்ளப்பட்டு, அவர்கள் தனித்தனியாக அத்தனை கதைகளையும் படித்து, விவாதித்து,

தேர்ந்தெடுத்த 20 கதைகளை, இரண்டு தொகுதிகளாக EBook வெளியிடுவதில் மத்யமர் குழு மகிழ்ச்சி கொள்கிறது.! இது Madhyamar Publicationsஸின் இரண்டாவது EBook.

இந்த EBookகையும் நீங்கள் படித்து, மத்யமரில் விமர்சனங்கள் இடுமாறு வேண்டுகிறேன். உங்கள் உற்சாக ஆதரவு, இன்னும் அதிக EBooks நாம் வெளியிடத் தூண்டும்.

நன்றி.!

**ஷங்கர் ராஜரத்னம்**

Chief Administrator – Madhyamar Group

www.facebook.com/Groups/Madhyamar

# Table Of Contents



# வெளிச்சத்துக்கு வராத தியாகங்கள்

**வசந்தா வானமாமலை**

புவனா தன் மொபைலில் இருபத்திரண்டாவது முறையாக மணி பார்த்தாள். நாலரை. இரவு முழுக்கத் தூக்கம் வராமல் விடியலை எதிர்பார்த்து மனசெல்லாம் பரபரத்தது.

ஆனந்தைப் பார்த்து கிட்டத்தட்ட ஒரு வருஷம் ஆயாச்சு. இன்னும் நான்கு மணி நேரத்தில் அவனைப் பார்க்கப் போகிறாள். இரண்டு மாதங்களாய் கைபேசியில் கூட அவன் தொடர்பு கொள்ளவில்லை.

இப்போதெல்லாம் இது அவளுக்குப் பழகி விட்டது. சில வேளைகளில் மூன்று, நான்கு மாதங்கள் கூடத் தொடர்பு கொள்ளாமல் இருந்திருக்கிறான்.

இராணுவ வீரனின் குடும்பம் இதற்குத் தயாராக இருக்க வேண்டும். நேற்று இரவு சென்னையிலிருந்து கிளம்பி விட்டதாக ஃபோன் பண்ணினான். அதற்கு இரண்டு நாட்கள் முன்பு தான் ஊருக்கு வரப் போகிறான் என்ற தகவலே வந்தது.

ஒவ்வொரு முறையும் அவன் குரல் கேட்கும் போது இன்னும் அவன் உயிரோடு இருக்கிறான் என்ற நிம்மதி பரவும். நாளை அவன் வரப் போகிறான் என்று தெரிந்தவுடன்

மனசெல்லாம் ஒரே பரபரப்பு.

ஆனந்தும், புவனாவும் சின்ன வயதிலிருந்தே எதிரெதிர் வீட்டில் வளர்ந்தவர்கள். தூரத்துச் சொந்தம் வேறு. ஆனந்தின் தாத்தா சுதந்திரப் பேராட்ட வீரர் என்பதால் அவன் அப்பாவின் இரத்தத்திலும், தேசபக்தி கலந்திருந்தது. அவர் அரசுப் பள்ளியில் வரலாற்று ஆசிரியர். அவர் பள்ளிக் குழந்தைகளிடம் எப்போதும் சுதந்திரப் போராட்டம் குறித்து கதை போலச் சொல்லிச் சொல்லி, நாட்டுப்பற்றைப் பிஞ்சு உள்ளங்களில் புகுத்துவார் .

ஆனந்த் தாத்தாவிடம் நேரடியாக சுதந்திரப் போராட்டம் குறித்த கதைகளைக் கேட்டு வளர்ந்ததால்

அவனுக்குச் சின்ன வயசிலேயே இமயமலைச் சிகரங்களில் நாட்டைப் பாதுகாக்கும் எல்லைச்சாமி ஆக வேண்டும் என்ற இலட்சியம் இருந்தது.

அவன் இளங்கலைப் பட்டப்படிப்பு முடிந்தவுடன் இராணுவத்தில் சேர்ந்து விட்டான். ஆனந்துக்கும் இவளுக்குமிடையே மெல்லிய இழை போல் இருந்த காதல், அவன் இராணுவத்தில் சேர்ந்தபின்தான் எவ்வளவு இறுக்கமானது என்பது புரிந்தது. பிரிவில்தான் அன்பின் வலிமை முழுமையாகத் தெரியும் போல. அவன் முதலில் அவன் வீட்டில் சொல்ல இரு குடும்பங்களுக்குள் ஏற்கனவே இருந்த பிணைப்பு இன்னும் நெருக்கமாகிப்போனது.

இராணுவத்தில் சேர்ந்தபின், இரண்டு வருஷம் கழித்து ஒரு மாத விடுப்பில் ஆனந்த் வந்தபோது இவர்கள் திருமணம் நடந்தது. அந்த ஒரு மாதமும் அவர்கள் வாழ்வின் வசந்த காலம். புவனா உள்ளூர் ஆரம்பப் பள்ளியிலேயே வேலை பார்த்ததால் அவள் அங்கேயே இருந்து விட்டாள். அந்த ஒரு மாத வாழ்க்கைக்கு அவளுக்குக் கிடைத்தபரிசு தான் மூத்த மகன் கௌதம். அடுத்த இரண்டு வருடங்களில் மகள் ஓவியா பிறந்தாள். ஆனந்தின் அம்மா, அப்பா உடன் இருந்ததால் குழந்தைகளை நேர்த்தியாக வளர்க்க முடிந்தது.

ஆனந்த் வருடத்திற்கு ஒரு தடவை வந்து இவர்களுடன் ஒரு மாசம் இருப்பான். அந்த ஒரு மாதமும் இவர்களுக்குக் கொண்டாட்டம்தான். அவன் நண்பன் தன் காரைத் தந்து விடுவான். இவர்கள் குழந்தைகளுடன் பார்க்க வேண்டிய இடங்கள் ஒவ்வொன்றாக முடிவு செய்து நன்றாக ஊர் சுற்றுவார்கள்.

அவன் வரும்போது எங்கெங்கே போக வேண்டும் என்று போட்டி போட்டுக் கொண்டு இடங்கள் தேர்வு செய்து வைத்திருப்பார்கள். ஆனந்தின் அம்மா அப்பா போன வருடம் தான் ஒருவர் பின் ஒருவராக இவ்வுலகப் பயணத்தை முடித்துக் கொண்டு திருப்தியாகக் கிளம்பினார்கள்.

அவன் இங்கே வரும்போதெல்லாம் பனிமலையில் சத்தமின்றி நடக்கும் யுத்தங்கள் பற்றிக் கதை போல குழந்தைகளிடம் சொல்லுவான். அவர்களுக்கு அப்பா தான் கதாநாயகன். “சினிமாவுல காட்டற மாதிரி நீ டிஷ்யூம் டிஷ்யூம்னு துப்பாக்கியால சுடுவியாப்பா?” என்று பையன் கேட்பான்.

“இல்லைப்பா, ரொம்பத் தேவை என்றால் மட்டுமே துப்பாக்கி பயன் படுத்துவோம். சாதாரண நாட்களில் சும்மா கூடாரங்களில் துப்பாக்கியுடன் காவல் மட்டுமே. ஆனால், எப்பவும் விழிப்போடு தான் இருக்கணும்.

சின்னச் சின்னச் சத்தங்களுக்குக் கூடக் கூர்மையாக கவனம் செலுத்துவோம். இங்க வந்தாத் தான் நிம்மதியாகத் தூங்க முடியும்!” என்று சொல்வான்.

அவன் சொல்லும் கதைகளை அவளும் ஆர்வமாய்க் கேட்பாள். அவன் இராணுவத்தில் சேர்ந்து இத்தோடு பன்னிரெண்டு வருடங்கள் ஆகி விட்டன. ஒவ்வொரு முறை

அவன் சென்ற பின்னும் வீடே வெறிச்சோடி விடும். அவர்கள் திருமணம் முடிந்த இந்தப் பத்து வருடங்களில் பதினைந்து முறை வந்து விட்டான். வாசல் மணி அழைத்தது. மணி ஐந்தரை.

ஒரு மணி நேரமாக இப்படிப் பழைய நினைவுகளில் மூழ்கி விட்டோமே! அவசர அவசரமாக எழுந்து வாசல் கதவைத் திறந்தாள்.

பால்காரரர். “இன்னைக்கு தானே அய்யா வராங்கன்னு சொன்னீங்க? பால் கூட வேணுமா?”, என்று ஞாபகமாகக் கேட்டார்.

“ஆமாம், மணி அண்ணே, இன்னும் ஒரு மாசத்துக்குக் காலையில அரை லிட்டர், சாயந்திரம் அரை லிட்டர் கூடுதலாகப் பால் ஊத்துங்க”, என்று சொன்னாள். ஒரு பெரிய பாத்திரத்தைக் கொண்டு வந்து பால் வாங்கிக்கொண்டாள். மளமளவெனப் பல் தேய்த்து, வாசல் தெளித்துக் கோலம் போட்டு, மறக்காமல் Welcome

எழுதினாள்.

உள்ளே நுழையும் போதே குழந்தைகள் அப்பாவின் வருகைக்காகச் செய்த அலங்காரங்களைப் பார்த்தாள். Welcome என்று எழுதி கலர் கலர் தாள்களில் தோரணம் கட்டி இருந்தார்கள். நடுவே தேசியக் கொடியும் தேசத் தலைவர்களின் படங்களும் இடம் பெற்றிருந்தது. அவற்றுக்கு கம்பீரமாக இராணுவஉடையில் ஆனந்தின் புகைப்படம் வீற்றிருந்தது.

இரண்டு வருடங்களாகத் தான் இதெல்லாம் செய்து அப்பாவை வரவேற்கிறார்கள்.

அவன் உள்ளே நுழைந்தவுடன் அவை ஒவ்வொன்றையும் பார்த்து

ரசித்துப் பாராட்டுவான். அவர்கள் முகத்தில் பெருமிதம் பொங்கி வழியும். அதை நினைத்துச் சிரித்துக் கொண்டே காபி போட ஆரம்பித்தாள். சூடாகக் குடித்த பின் அவனுக்குப் பிடித்த வடகரி, சாம்பார், சட்னி, கேசரி எல்லாம் செய்து முடித்து இட்லிப் பானையைக் கடைசியாக வைக்கலாம் என முடிவு செய்து மணி பார்த்தாள். எட்டே கால். இன்னும் முக்கால் மணி நேரம் தானே இருக்கு.

குழந்தைகளை எழுப்பினாள். “இன்னிக்கு அப்பா வரார், சீக்கிரம் ரெடியாகுங்க”என்றதும் உடனே எழுந்து விட்டார்கள். அவர்கள் வேலையை அவர்களே செய்யப் பழக்கப் படுத்தி இருந்தாள்.

அதனால் அவர்கள் கடகடவென ரெடியாகி, இந்த அலங்காரங்களைப் பார்த்து அப்பா என்ன சொல்லப் போகிறார் என்று ஆர்வமாய்க் காத்திருந்தனர்.

அவனுக்குப் பிடித்த அசைவ உணவு, மதியம் செய்வதற்கு எல்லாம் ஏற்கனவே வாங்கி வைத்து விட்டாள்.

ஒன்பது பத்துக்கு வாசலில் கார் நிற்கும் ஓசை கேட்டது. சத்தம் கேட்டு எல்லாரும் வாசலுக்கு ஓடிவந்தார்கள். முதலில், இவர்கள் இது வரை பார்த்திராத ஒருவன் இறங்கினான். அதன் பின் ஆனந்த் இறங்கினான். ஸ்டைலாகக் குளிர் கண்ணாடி அணிந்திருந்தான்.

குழந்தைகள் “அப்பா” என்று ஓடிப் போய் அணைத்துக் கொண்டனர். அவன் இரண்டு பேரையும் இரண்டு பக்கமும் அணைத்துக் கொண்டான். புவனாவுக்கு, அவன் ஏன் இன்னும் தன்னைப் பார்க்கவில்லை என உறுத்தல் எழுந்தது. அவன் பக்கத்தில் போய்க் கை பிடித்ததும் அவளைப் பார்த்து “புவனா! எப்படி இருக்க?” என்று சிரித்தான்.

அதற்குள் கூட வந்தவர் லக்கேஜ்களை யெல்லாம் இறக்கி வைத்தார். அத்துடன் ஒரு ஸ்டிக்கும் இருந்தது. புவனாவுக்குப் புரிந்து விட்டது.

அவன் கழற்றாத குளிர் கண்ணாடியும், அந்த ஸ்டிக்கும் ஆனந்தின் நிலையைப் புரிய வைத்தது.

அழுகை முட்டிக் கொண்டு வந்தது. அவன் கையை இறுக்கமாகப் பிடித்தாள். வந்தவர் டாக்ஸிக் காரருக்குப் பணம் கொடுத்து அனுப்பி வைத்தார். அதற்குள் தெருவில் நாலைந்து தலைகள் எட்டிப் பார்த்தன.

இவள் அவன் கையைப் பிடித்துக் கொண்டதும் அவன் சாதாரணமாக நடப்பது போல் வீட்டின் வாசல் படி மிதித்தான்.

அதற்குள் பெண் “அப்பா, உங்களுக்காக நாங்க  என்ன வெல்லாம் பண்ணி இருக்கோம் பாருங்க” என்றாள்

மழலையில். மகன் படு சுட்டி. சூழ்நிலையைப் புரிந்து கொண்டான். அப்பாவின் கையைப் பிடித்து



வீட்டுக்குள் கூட்டிப் போனான். அதற்குள் கூட வந்தவரை, “வாங்க சார்”, என்று கை கூப்பினாள்.

இவளது கலங்கிய முகத்தைப் பார்த்து, “சிஸ்டர், நான் ஆனந்தின் நண்பன் மகேஷ். அவன் கூடத்தான் வேலை செய்யறேன். இரண்டு மாசம்

முன்னாடி ஒரு ரகசியத் தாக்குதலின் போது அவருக்குக் கண்களில் பலத்த அடிபட்டு, அதில் கண் பார்வை போய் விட்டது. இவ்வளவு நாள் சிகிச்சை அளித்ததால் மற்ற காயங்கள் எல்லாம் ஆறி விட்டது. ஆனந்த் இதை உங்களுக்குத் தெரிவித்தால் அதிர்ச்சியாக இருக்கும் என்பதால் தெரிவிக்க வேண்டாம், நானே நேரில் போய் சொல்லிக் கொள்கிறேன் என்று சொல்லி விட்டார். அவருக்குத் துணையாக என்னை அனுப்பினார்கள்.

மற்ற விபரங்கள் அவரே சொல்லுவார்” என்றார். இரண்டு பேரும் பெட்டிகளுடன் வீட்டுக்குள் வந்தார்கள்.

உள்ளே குழந்தைகளின் அலங்காரத்தைத் தொட்டுப் பார்த்து "ஒவியாக் குட்டியும், கௌதம் அண்ணாவும் அழகா டெக்கரேஷன் பண்ணி இருக்கீங்களே! அப்பாவுக்கு ஒவ்வொண்ணா explain பண்றீங்களா? இனிமேல் அப்பா உங்க கூடத் தான் இருப்பேன். நாம எல்லாரும் ஜாலியா சேர்ந்தே இருக்கலாம். என்ன?" என்றான்.

இவன் இதைச் சொல்லும் போதே புவனா உள்ளே வந்துவிட்டாள்.

'இனிமேல் நாம சேர்ந்து இருப்பது சந்தோஷம்தான்.

இப்படிக் கண் இழந்த நிலையிலும் கலங்காமல் இருக்கீங்களே, எஞ்சாமி!' என்று அவனை அணைத்து ஆறுதல்

சொல்ல வேண்டும் போல் இருந்தது. ‘உனக்குப் பிடித்த கலர் என்று எல்லாரும் நீல நிறத்தில் டிரஸ் போட்டிருக்கோமே, கடவுளே! ஏன் எங்களுக்கு இந்த சோதனை?’ என்று மனசு அரற்றியது.
வந்தவர் முன்னால் கலங்கக் கூடாது என்று கண்ணீரை உள்ளிழுத்தாள்.

அவர்கள் குளித்து முடித்த பின் எல்லாரும் சாப்பிட்டு முடித்தார்கள். வந்தவர், “நான் கிளம்பறேன் ஆனந்த். எங்க வீட்டிலும் எதிர்பார்த்துக்கிட்டு இருப்பாங்க. சென்னை எப்ப போகப் போறீங்கன்னு முடிவு செய்து விட்டுச் சொல்லுங்க. நான் வந்து உதவி பண்றேன்”, என்று சொல்லிவிட்டுக் கிளம்பினார்.

இதற்குள் ஊர்க்காரரர்கள் நாலைந்து பேர் வந்து பார்த்து விட்டு “என்னப்பா இப்படி ஆயிடுச்சு!”, என்று வருத்தப்பட்டு விட்டுப்போனார்கள். மூவரும் பக்கத்தில் உட்கார்ந்தார்கள்.

புவனா ”என்னங்க ஆச்சு? எதுவும் எங்களுக்குச் சொல்லாமலே இருந்துட்டீங்களே!” என்று கேட்டாள். “ஒரிஸ்ஸா புவனேஷ்வரில் தீவிரவாதிகள் ஒரு பள்ளிக்கூடத்தைத் தாக்கப் போவதாகத் தகவல் கிடைத்தது. அவர்கள் பதுங்கியிருந்த வனப்பகுதிக்கு என் தலைமையில் குழுவினருடன் போயிருந்தேன். அவர்களைச் சுற்றிவரப் பதுங்கி இருக்கச் சொல்லி விட்டு நான் மட்டும்

துப்பாக்கியுடன் முன்னேறினேன். அப்போது என்னைப் பார்த்து தீவிரவாதிகள் சுட்டார்கள். நான் குனிந்து, வளைந்து தப்பித்துக் கொண்டே முன்னேறினேன்.

என்னை எங்கிருந்து தாக்குகிறார்கள் என்பதை வைத்து, இலக்கு கண்டு பிடித்து, எங்கள் குழு அவர்களைச் சுற்றி வளைத்து அழித்துவிட்டார்கள். துப்பாக்கிக் குண்டு பாய்ந்த நிலையிலும் ஒரு தீவிரவாதி என் அருகில் வந்து விட்டான். அவன் துப்பாக்கி நழுவி விழுந்து விட்டது.

அப்போதும், கூர்மையான கத்தி போன்ற ஏதோ ஒரு ஆயுதத்தால் என் கண்களைத் தாக்கி விட்டுத்தான் இறந்து போனான். அன்று அவன்

கையிலிருந்து துப்பாக்கி நழுவாமல் இருந்திருந்ததால், நான் உயிரோடு இருந்திருக்க மாட்டேன்.

இன்னொரு நண்பருக்குக் காலில் துப்பாக்கிக் குண்டு பாய்ந்து ஒரு கால் போய்விட்டது. எனக்குக் கண்கள். நல்லவேளை, மற்றவர்களுக் -கெல்லாம் சிறு காயங்கள்தான். இந்தத் தாக்குதலால் நானூறு பள்ளிக் குழந்தைகளைக் காப்பாற்றி விட்டோம். எதிரிகளைக் கூட நேருக்கு நேர் எதிர்கொள்ளலாம்.

நம் நாட்டுக்குள்ளேயே உருவாகும் தீவிரவாதிகளைக் கண்டுபிடித்து அழிப்பது தான் உண்மையிலேயே கஷ்டம்” என்றான்.

அவர்கள் மூவரும் அவனை அணைத்துக்கொண்டார்கள். அந்த அணைப்பில் நீ உயிருடன் வந்தாயே, அது போதும் என்ற ஆறுதல் இருந்தது.

“நீ இனிமேல் எங்க கூட இங்க தான் இருப்பியாப்பா?”, என்று மகன் கேட்டான். “எனக்குச் சென்னை தாம்பரத்தில் வேலை செய்ய ஆர்டர் கொடுத்துட்டாங்க. அதை வைத்து அம்மாவுக்கும் அங்குள்ள பள்ளிக்கு மாறுதல் செய்ய சிபாரிசுக் கடிதம் கொடுத்திருக்காங்க.

அதனால நாம எல்லாரும் இனி மேல் சேர்ந்தே இருக்கலாம்.நான் பிரெய்லி முறையில் வேலை செய்யக் கத்துக்கப் போறேன்.

என்ன டீச்சரம்மா! நீங்க என்ன எதுவும் சொல்லலை?", என்று கேலியாகக் கேட்டான்.

"எவ்வளவு பெரிய வேலை செய்திருக்கீங்க! இதெல்லாம் ஏன் செய்தியில் வரலை?", என்று கேட்டாள். "இதெல்லாம் ரகசியத் தாக்குதல்கள்மா. இந்த மாதிரி தினமும் ஆங்காங்கே நடந்து கொண்டே தான் இருக்கு. எல்லாத்தையும் வெளியில் சொல்ல மாட்டாங்க. இது போன்ற வெளிச்சத்துக்கு வராத தியாகங்கள் எத்தனையோ இருக்கும்மா. எங்கள் குழுவில் உயிரிழப்பு இல்லாததே மிகப்பெரிய அதிர்ஷ்டம் தான். எனது கவலை எல்லாம் இனிமேல் இந்த

மாதிரி யுத்தங்களில் என்னால் கலந்து கொள்ள முடியாதே என்பது தான்.

இனிமேல் உங்களுடன் சேர்ந்து இருக்கும் வாழ்க்கையை அனுபவிக்கப் போகிறேன்" என்றான். "நாங்களும் தான்" என்று சொல்லி அவனை மூவரும் அணைத்துக் கொண்டார்கள்.

கௌதம் "அப்பா, உனக்கு இனி மேல் ஆறு கண்கள் இருக்கும்பா. நாங்க மூணு பேரும் உங்களுக்குக் கண்ணாக இருப்போம்பா.

நான் பெரியவன் ஆனதும் உன்னை மாதிரியே நாட்டைக் காக்கப் போவேம்பா!" என்றான்.

ஆனந்த் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் வழிந்தது. குட்டிப் பெண் வழியும் கண்ணீரைத் துடைத்து விட்டாள்.

*************



# தாரை வார்த்தல்

## அனுராதா ஜெய்ஷங்கர்

”வனஜா! குழந்தை எழுந்துட்டாளா? எட்டு மணிக்கு கொடி ஏத்த போகணும். மணி இப்பவே ஏழு ஆச்சு ”.

சங்கரன் கதர் துண்டை உதறி ஜிப்பா மேல் போட்டுக் கொண்டார். கை நடுக்கத்தில் அது சற்றே நழுவி விழ, சிறிது சிரமத்துடன் மீண்டும் பிடித்து சரியாகப் போட்டுக் கொண்டார். உடலுக்கும் மனதுக்கும் எப்போதும் நடக்கும் இளமைப் பந்தயத்தில் உடல் முந்துவதால் கை கால்களில் லேசான நடுக்கம்.

அது கூட இல்லை என்றால் தொண்ணூறு வயதுக்கு என்னதான் மதிப்பு? அறைக்குள் எட்டிப் பார்த்த கமலம் அவள் இன்னும் தூங்குகிறாள் என்று சைகையால் கணவரிடம் சொன்னார். அவர் காதில் விழும் அளவுக்கு உரக்க கத்தி சொல்வதற்கு அவரது என்பத்தாறு வயது எப்போதும் ஒத்துழைப்பதில்லை.

”ஒரு வேளை ஜெட் லாக் இன்னும் இருக்கோ? இல்லேன்னா எழுந்துடுவா. அவளுக்கு நினைவு தெரிஞ்ச நாளாக ஒரு சுதந்திர தினக் கொடி ஏற்றத்தையும் தவற விட்டது இல்லையே. விட்டுட்டுப் போனா வருத்தப்படுவா.

பிள்ளையைப் பார்க்க அமெரிக்கா போனவள், இதுக்காகவே ஒரு மாசம் முன்னாடி கிளம்பி வந்திருக்கா. இன்னொன்னு கவனிச்சியா, இந்த முறை ஊரிலேருந்து வந்தப்புறம் கொஞ்சம் டல்லாவே இருக்கா.”. கிழவர் புலம்ப ஆரம்பித்து விட்டார்.

சங்கரனது இளமைப் பருவத்தில் வீட்டில் அவரது தந்தையை பார்த்து பேச வரும் சுதந்திரப் போராட்ட வீரர்களும் அவர்களது சிந்தனைகளும் அவருள் தீராத தேசப் பற்றை உண்டு பண்ண, அவரும் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை சென்றவர்.

தந்தையின் நண்பர் மகளை அம்மாதிரியான ஒரு போராட்டக்

கூட்டத்தில் சந்தித்து , இருவரும் மனமொத்து , நாட்டிற்கு விடுதலை கிடைத்தபின் மணம் செய்து கொண்டவர். கிட்டத்தட்ட கடந்த அறுபது வருடங்களுக்கும் மேலாக தம்பதியினர் சேர்ந்தே ஒவ்வொரு ஆகஸ்ட் பதினைந்தும் இருக்கிற இடத்தில் தேசியக் கொடியை ஏற்றி வந்தனர். சுதந்திர தினம் அவர்களுக்கு ஒரு முக்கியமான பண்டிகை. மகளையும் தம் கதைகளைச் சொல்லியே வளர்த்தனர். கார்கில் யுத்த நிதிக்கு தங்களது ஒய்வூதிய சேமிப்பு நிதியை மொத்தமாக அனுப்பி வைத்தனர்.

கடந்த பதினைந்து வருடங்களாக மகளுடன் வந்து வசிக்கத்

தொடங்கியதில் இருந்து அவர்கள் இருக்கும் குடியிருப்புப் பகுதியில் அவர்கள்தான் சுதந்திர தின விழாவுக்குச் சிறப்பு விருந்தினர். அவர்களது மகள், அவரால் குழந்தை என்று அழைக்கப்பட்ட அறுபது வயது லட்சுமிக்கு ஒரே மகன்.



இப்போதைய மத்திய தர வழக்கத்தை பின்பற்றி இந்தியாவில் பொறியியல் முடித்து விட்டு, மேற்படிப்புக்கு உதவித் தொகை பெற்று, அமெரிக்கா சென்று படித்து முடித்து, கல்யாணம் ஆகி, ஒரு குழந்தையும் பிறந்து, எல்லோரையும் போல, இரண்டு வருடங்களுக்கு ஒரு முறை இந்தியா வருபவன்.

அவனது மகனுக்கு ஐந்து வருடங்களுக்கு முன் மொட்டை அடித்து காது குத்திப் போன பிறகு, கடந்த இரு முறைகளாக லக்ஷ்மியும் அவள் கணவரும் தான் சென்று வந்தனர். சங்கரனின் நச்சரிப்பு தாங்காமல் கமலம் சென்று லட்சுமியை எழுப்பினார்.

லக்ஷ்மியும் நேரத்தைப் பார்த்துப் பதறி எழுந்து உடனே கிளம்ப, மூவரும் விழா நடக்கும் இடத்திற்குச் சென்றனர். பெரும்பாலான குடியிருப்புகளைப் போல அங்கேயும் சில வயதானவர்கள், நிறைய குழந்தைகள், அந்தக் குழந்தைகளின் பெற்றோர் என ஒரு சிறிய கூட்டம் குழுமி இருக்க, மீதி பேர் கிடைத்த ஒரு நாள் விடுமுறையை வீணாக்காமல் உறங்கிக் கொண்டு இருந்தனர் .

எப்போதும் போல சங்கரனும், கமலாவும் தேசியக் கொடியை நெஞ்சு கொள்ளா பெருமிதத்துடன், முதன் முறையாக மூவர்ணக் கொடியை ஏற்றிய அதே உணர்வுடன்

ஏற்ற, கரகோஷங்களுடன், சில சிறிய நிகழ்ச்சிகளுடன் விழா நடந்து முடிந்தது. தேசிய கீதம் பாடும்போது லட்சுமிக்கு தன்னையும் மீறி கண்களில் கரகரவென கண்ணீர் வழிய, அங்கு இருந்தவர்களிடம் ஒரிரண்டு வார்த்தைகள் கூட பேசாமல் வீட்டுக்கு விரைந்து வந்து விட்டாள்.

பெற்றோர் இருவரும் அவள் சென்றதைப் பார்த்து விட்டு என்னவோ ஏதோ என்று பதட்டத்தில் வீட்டுக்குப் பின்தொடர்ந்து வர, அங்கு லக்ஷ்மி தரையில் அமர்ந்து விசித்து அழுது கொண்டிருப்பதைப் பார்த்துப் பதறிப் போனார்கள்.

”அம்மாடி, என்னம்மா ஆச்சு?”, கமலா மகள் பக்கத்தில் உட்கார்ந்து வினவ, சங்கரன் ஒரு நாற்காலியை இழுத்து அருகில் போட்டுக் கொண்டார் . ” அம்மா, என்ன சொல்லு. பயமா இருக்கு. ஏன் இப்படி அழற?”, அவர்கள் கேட்டவுடன், அதற்காகவே காத்திருந்த மாதிரி உடைந்து போனாள் லக்ஷ்மி.

” ரெண்டு பேரும் என்னை மன்னிச்சிடுங்க. பெரிய தப்பு நடந்து போச்சு”. கைகளைக் கூப்பியவாறு அழவும், பெரியவர்கள் இருவரும் குழம்பிப் போனார்கள்.

” கடவுளே.ஒண்ணுமே புரியலை. விவரமா சொல்லுமா. யாருக்கு என்ன ஆச்சு?”

” ஊருக்கு போகும்போது இங்கே இருந்து உங்க கொள்ளுப் பேரன் அர்விந்துக்கு நிறைய கேம்ஸ் வாங்கிட்டுப் போனேன். தினமும் ஆசையா உட்கார்ந்து என்னோட விளையாடுவான். அதுல ஒரு விளையாட்டு நாடுகளோட பேரையும் அந்த நாட்டுக் கொடியையும் சரியா பொருத்தறது. ஒரு நாள் அது விளையாடினோம்.

அப்போ என்ன ஆச்சு தெரியுமா?” மீண்டும் லக்ஷ்மியின் கண்கள் நிரம்பின. முகத்தில் அடர்ந்த வேதனை படர்ந்தது. ”பத்து நாடுகள் எடுத்து அதை சரியா மேட்ச் பண்ணினோம். அப்போ இந்தியக்  கொடியைக் காட்டி, ’பாட்டி,

திஸ் இஸ் யுவர் கண்ட்ரி' ன்னு சொன்னான். உடனேயே அமெரிக்கா கொடியைக் காட்டி, 'திஸ் இஸ் மை கண்ட்ரி' ன்னான். எனக்கு அப்படியே பளார்னு கன்னத்துல அறைஞ்ச மாதிரி இருந்ததுப்பா. உயிரே போன மாதிரி இருந்தது . என்னால தாங்க முடியலை. அப்படியே உறைஞ்சு போயிட்டேன். அவன் குழந்தை.

அவனை என்ன சொல்ல முடியும்?" அவர்கள் முகத்தில் லேசான அதிர்ச்சி தெரிந்தாலும் ஒன்றும் பேசவில்லை. " குழந்தைகள் வெளிநாடு போய் படிக்கிறது, நல்ல வேலை, சம்பாத்தியம் எல்லாம் நல்லா இருக்கு. அவர்களுக்குப் பிடிச்சிருக்கு. அதை நம்ம நாட்டோட brain drainன்னு

சொல்றது ஒரு பக்கம். அதுக்கு எத்தனையோ காரணங்கள். ஆனா அதோட மறு விளைவா இந்த மாதிரி சின்ன குழந்தைகள். அப்படியே நம்ப வம்சத்தை இந்தா எடுத்துக்கோ என்று இன்னொரு நாட்டுக்கு தாரை வார்த்தது மாதிரி இருந்ததும்மா. என்னால தாங்க முடியலை.

இந்த குழந்தை இங்கே எப்படித் திரும்பி வருவான். வந்தாலும் என்ன ஒட்டுதல் இருக்கும். ஒரு டூரிஸ்ட் மாதிரி வரலாம். இது எல்லாமே அடுத்தடுத்த தலைமுறைகளில் நடக்கும்னு தெரிஞ்சாலும், இவ்வளவு சீக்கிரம், நம் கண் முன்னே, நம்ம தலைமுறையில் நடக்கும்னு எதிர்பார்க்கல.

இன்னிக்கு நீங்க ரெண்டு பேரும் நம்ம தேசியக் கொடியை ஏத்தினப்போ என்னால மொத்தமா கட்டுப்படுத்திக்க முடியலை”. கமலம் மகளைத் தன் தோள் மேல் சாய்த்துக் கொண்டு மெல்ல தடவிக் கொடுக்க, சங்கரன் மெல்லப் பேசினார்.

”காலச் சக்கரம் என்று சும்மா சொல்றதில்லைம்மா. அது நிற்காம சுத்திட்டே இருக்கும்போது நடக்கிற மாற்றங்கள் தவிர்க்க முடியாது. யாராலும் பிடிச்சு நிறுத்தவும் முடியாது. கீழே இருக்கிற சக்கரம் மேலே போன மாதிரி மேலே போனதும் கீழே வரும். குழந்தைகள் திரும்பி தாய் மண்ணைத் தேடி விரும்பி வர்ற நாள் ஒண்ணு வரும்.

அந்த நாள் நம்ம தேசத்துக்கு இன்னொரு பொற்காலமா ஆகும். நாங்க பார்க்கப் போறது இல்லை. ஆனால் இந்த நாட்டை நேசிக்கிற நம்ம மாதிரி எத்தனையோ பேரின் கனவு ஒரு நாள் நடந்தே தீரும். அதுவரை நம்பிக்கையோடு பொறுத்து இருப்போம்".

அவர் வார்த்தைகள் அப்போது ஆறுதலாக இருந்தாலும், நெஞ்சில் அறைந்த நிதர்சனமும், அது தந்த வலியும் அடங்காது என்றுதான் லட்சுமிக்கு தோன்றியது . அப்பாவின் வார்த்தைகள் நனவாக வேண்டும் என்று பிரார்த்திக்க ஆரம்பித்தாள் லக்ஷ்மி.

**********



# உங்கள் நண்பன்

**ஜெயஸ்ரீ சடகோபன்**

”அனீஷ், அக்ஷயா.! இப்போ நீங்க ரெண்டு பெரும் சும்மா இல்லாட்டா ஒருத்தருக்கும் பொம்மை கொண்டு வர அனுமதி கிடையாது!”. நான் மிரட்டியதும் இருவரும் சும்மா அமர்ந்தனர். அப்பா! இந்த குழந்தைகளோடு சண்டை போடுவது ரொம்ப கஷ்டம் என நினைத்துக் கொண்டே அனீஷின் இந்திய ராணுவ படை பொம்மைகளை திரட்டிப் பெட்டிக்குள் அடக்குகின்றேன். இன்று மாலை நாங்கள் விமானத்தில் புதுதில்லி பயணிக்கின்றோம்.

அங்கே சுற்றிப் பார்த்து, முக்கியமாய் கார்கில் போர் ஞாபகார்த்தமாகக் கட்டப் பட்டிருக்கும் ’கார்கில் போர் பூங்கா’ சென்று வீரர்களுக்கு அஞ்சலி செலுத்தவும் குடும்பமாய் பயணிக்-கின்றோம். ஆம், மறைந்த என் தந்தை ஒரு இந்திய விமானப் படைத் தளபதி என்பதால் அவர் நினைவுகள் முழுமை பெறச் செய்வதே இந்த பயணத்தின் நோக்கம். மாலை இந்தியன் ஏர்வேஸ் விமானத்தில் ஏறி அமரவும் விமானம் துவங்குகிறது.

மயங்கும் மாலை வேளை தரை-யெங்கும் மின்வெளிச்சத்தில் ஜொலிக்க, என் சென்ற வருடம் என் தந்தை புதுதில்லி சென்று

திரும்பியதும் என்னுடன் பேசியவை நினைவுக்கு வருகின்றன. ”அம்மா வஸூ, தெரியுமா, புதுதில்லியில் கார்கில் போர் பூங்கா புதிதாய் அரசு காட்டியுள்ளது. ஆமாம், என் நண்பன் கர்னல் ரன்வீர் சிங்க்கோடு போயிருந்தேன். அபாரம்.

அங்கே கார்கில் போரில் போரிட்ட வீரர்கள் பெயர்களை பட்டியலிட்டு, அவர்கள் உபயோகித்த போர்முனை ஆயுதங்கள், நவீன காலாட்படை கருவிகள், போர் விமானங்கள், ஏன், நீர்மூழ்கிகள் ஒருசில கூட பார்வை-க்கு வைக்கப்பட்டிருக்கின்றன. மேலும் பூங்காவில் பல இந்திய பாகிஸ்தான் போர்கள் சம்பந்தமான பார்வைத் திடல்கள் வைக்கப்பட்டிருக்கின்றன.



சியாச்சின்
சிகரத்தில்
1984ம் ஆண்டு
தொடங்கி,
2003 வரை
போரிடப்பட்ட
விவரத்தைக்கூட
தத்ரூபமாய் வடித்து
வைத்திருக்-கிறார்கள்.
அற்புதம்! நீயும் ஒருமுறை சென்று வா”
சென்ற வருடம் அப்பா என்னோடு
பேசியபோது அவர் கண்களில்
பளீரென்ற மின்னல்.

ஒரு சிறுவயது துள்ளலோடு அவர்
என்னிடம் விவரித்தது என் நினைவில்
விரிய, என் கண்ணோரத்தில்
பனிக்கிறது.

இதைப் பற்றி பின்னர் நான் பிரபல பத்திரிகை, ’உங்கள் நண்பன்’ -க்கு எழுதி அனுப்ப, அவர்கள் இந்தப் பூங்கா பற்றி ஏற்கனவே நிறைய எழுதி விட்டோம் என்று, என் கட்டுரையை மறுத்துவிட்டதும் நினைவில் எழாமல் இல்லை.

அது பிரசுரமாகியிருந்தால் என் தந்தைக்குச் சிறந்த ஒரு விருது கொடுத்த சந்தோஷம் என்னுள் பூத்திருக்கும் என நினைத்தபோது, ஒரு சிறு ஏக்கப்பெருமூச்சு விடாமல் இருக்க முடியவில்லை.

”ஹுக்கும்.” அருகில் கனைப்பு சப்தம். என்  கணவர் ரவி ”உன் மகன் அனீஷுக்கு  உன் தந்தையைப்போல ராணுவஆர்வம் உள்ளது, பார்,

ஆசையுடன் இந்திய ராணுவ வீரர் படையுடன் விளையாடிக் கொண்டிருக்கிறான், அவன் பேச்சும் எப்போதும் இந்தியா பற்றியதே”, ரவி சொல்ல, நான்புன்னகைக்கிறேன்.

”தாய் தந்தையர் செய்யும் தொழிலையே பிள்ளைகளும் செய்தால், அவர்களையே பாராட்டுவது போல ஆகுமே” ரவி சொல்லவும், நான் ஆமோதிக்கிறேன். ”நீங்கள் சொல்வது சரியே, அனீஷ் இந்திய ராணுவத்தில் சேர்ந்தால் அது என் தந்தைக்கும் மரியாதை, இந்தியாவுக்கும் மரியாதை” அன்புடன் முடிக்கிறேன்.

அடுத்த நாள் காலை கார்கில் போர் பூங்கா செல்வதற்கு முன்னர்,

ஒரு கோவில் செல்கிறோம். அங்கே பூஜாரி அர்ச்சனைகள் முடித்து, ஒரு குடத்திலிருந்து நன்னீரை எங்கள் எல்லோர் மேலும் தெளிக்கிறார்.

”இது என்ன அம்மா? தண்ணீரை ஏன் நம் மேல் தெளிக்கிறார்?” அக்ஷயா என்னிடம் வினவ, அனீஷ் முந்திக்கொள்கிறான். ”அது மந்திரிக்கப்பட்ட நன்னீர், அதாவது நாம் எல்லோரும் நன்றாக இருக்கவேண்டும் என நினைத்து பூஜாரி அதன் முன்னே பூஜைகள்  செய்கிறார்; பின்னர் நம் மீது தெளிக்கும்போது அந்த நல்ல எண்ணங்களின் பயனாய் நமக்கும் நன்மை விளையும்!”

அனீஷ் தெரிவிக்கவும், நாங்கள் ஆமோதிக்கிறோம். ”பர்ர்ர்.” அலைபேசி சிணுங்குகிறது. அது என் மைத்துனர் மகன் ப்ரணவின் அழைப்பு.

பிரணவ் தன் தோழன் ஒருவனின் மருத்துவ செலவுக்கு அனீஷ் நன்கொடை அளிக்க முடியுமா என வினவுகிறான். அனீஷுக்கு தனது நண்பன் நிகில் ஞாபகம் வருகிறது. அனீஷும் இதே போல நிகிலின் புற்றுநோய் குணமாக நன்கொடை சமீபத்தில் திரட்டியிருந்தான். ”ஓ தருகிறேனே, என் நண்பன் நிகிலின் பெயரால் நான் ஒராயிரம் தருவதாக குறித்துக்கொள் பிரணவ்!”
அனீஷ் கூறவும் எதிர் முனையில் பிரணவ் மௌனிக்கிறான்.

”எப்படி நிகில் என்ற பெயரை யூகித்தாய்? அதே பெயரில் உள்ள என் தோழனுக்காகத்தான் இங்கே நானும் நன்கொடை திரட்டிக்கொண்டு இருக்கிறேன்!” பிரணவ் கூறவும், எங்களுக்கெல்லாம் ஒரே ஆச்சர்யம்.

ரவி சொல்கிறார், ”பார்த்தாயா! நம் நிகிலுக்கு நன்மை நினைத்தான் அனீஷ், அது அதே பெயரிலுள்ள மற்றொரு நிகிலுக்கே சென்று அடைகிறது!  நம் நற்சிந்தனைகள் ஒரு நாளும் வீணாவது இல்லை!”. கார்கில் நினைவு பூங்காவில் சனியன்று காலை ஆங்காங்கே ஜனத்திரள்.

கேள்வியுடன் சிலரும், வியப்புடன் பலருமாய் நம் இந்திய வீரர்கள் போன்ற பொம்மைகள் எதிரிகளுடன் போர் புரிவது போன்ற அமைப்புகளை பார்வையிட்டுக் கொண்டிருந்தனர். சிலர் அமைதி என்று இருவிரல்களை விரித்து புன்னகையுடன் புகைப்படம் எடுத்துக்கொண்டனர். இன்னும் சிலர் வழிகாட்டிகளை ஏற்படுத்திக் கொண்டு கேள்விகளை தொடுத்துக் கொண்டிருந்தனர். எனக்கோ அனைத்தையும் பார்வையிட என் தந்தை முன்னே நிற்பது போன்ற உணர்வு மேலோங்கியது. என் சிந்தனைகள் பின்னோக்கி ஒடின.

என் தந்தை மற்றும் அவரது ராணுவப் பணி குறித்து அனைத்து ஞாபங்களும் ஒன்றாய் திரண்டு, என் முன்னே அணிவகுக்க, ஒவ்வொரு திடலும் ஒவ்வோரு மாதிரி என்னோடு கதை பேசியது. இவ்வுலகுக்கோ அவை அனைத்தும் வீரத்தின் சுவடிகள். எனக்கோ வீரத்துடன் கூடிய பாசப்பிணைப்பின் ஆதாரபூர்வம். சில வினாடிகளில், கார்கில் போரில் பங்கேற்று சிறப்பாய் போரிட்டதற்காக 'பரம் வீர சக்ரா' விருது வழங்கி கௌரவிக்கப் பட்ட யோகேந்திர சிங் யாதவ் -ன் சிலை முன்னே சென்று நிற்கிறேன். "இப்படித்தானே என் தந்தையும் முனைப்புடன் போரிட்டிருப்பார்?

ஏன், ஒவ்வோர் வீரரின் ரத்தம்தானே இம்மண்ணின் உய்வுக்கு வித்தாகிறது? உடலால் வெவ்வேறாயினும், உணர்வால்  இவரேதானே என் தந்தையும்  ஆகிறார்?! இந்தியத் திருநாட்டின் ஒவ்வோரு வீரரும் அவ்வாறுதானே?!" சுயேச்சையாக என் வலக்கை நகர்கிறது. விரைப்புடன் ஒரு வீர வணக்கம் சல்யூட் என்று என் தலையை தொட்டு வருட, மெய் மறக்கிறேன்.

கால்கள் துவண்டதுபோலவும், கண்கள் மருண்டதுபோலவும் ஒரு மெல்லிய நூலாடலில் நான் சற்றே களைப்புடன் சாய எத்தனிக்கையில், பின்னே ஒரு கனைப்பு சப்தம் மிக

அருகே கேட்கிறது! நான் திரும்பிப் பார்க்கிறேன். ”உங்களைப் பார்த்ததில் இருந்து கவனிக்கிறேன், உங்கள் பார்வையில் அப்படியொரு ஆர்வம்! தங்கள் நாட்டுப் பற்றுக்காக உங்களைப் பேட்டி எடுக்க, எங்கள் பத்திரிகை சார்பாக வேண்டுகோள் விடுக்கிறோம்.

தங்களால் இந்த பூங்கா பற்றி பேட்டி கொடுக்கமுடியுமா? இந்த ஆகஸ்ட் 15 -க்கு பத்திரிகையில் வெளியிடுவோம்”, கையில் மைக்குடன் ’உங்கள் நண்பன்’ பத்திரிகை ஆட்கள். என் கண்கள் மீண்டும் பனிக்கின்றன. ஆம்! நம் நற்சிந்தனைகள் ஒரு நாளும் வீண் போவதில்லை!

யோகேந்திர சிங் யாதவ்வின் வடிவில் என் தந்தையையும், தாய் திருநாட்டின் வீரத் திரு மகனார்களையும் கண்ட என் வீர வணக்கம் அவர்களைச் சென்று அடைந்ததை இதே ’உங்கள் நண்பன்’ என்னை அணுகியதை வைத்து அறிகிறேன்.

என் கரங்கள் தானாகவே மற்றொரு சல்யூட்டுக்குப் புன்னகையுடன் தயார் ஆகின்றன.

***************



## MIW(E)

**லக்ஷ்மி நரஸிம்மன் ராஜாராமன்**

”என்ன மாரி, எப்பவும் போலத்தானே ரெண்டு தோசை பார்சல் செந்தில் கடையிலேர்ந்து?” ”இல்லை சுப்பக்கா! இன்னிக்கு மூணு இட்லி போதும். நாளைக்கு பக்கத்து ஏரியால இருக்கிற ஸ்கூல்ல நாலு கதம்ப மாலையும் ஒரு ₹50க்கு உதிரியும் கேட்ருக்காங்க. மாணிக்கமண்ணா இப்பதான் பூவெல்லாம் டெலிவரி பண்ணாங்க. அதேமாதிரி இன்னும் ஏழெட்டு ஆர்டர் இருக்கக்கா.” ”சர்டா. நான் பத்து நிமிஷத்துல வர்றேன் ” என்று சொன்னவாறு கொஞ்சம் இடது

காலை சற்றே விந்தியவாறு சுப்பக்கா நடந்து போனாள்.

மாரி கொஞ்சம் கட்டையா குட்டையாக இருந்தாலும் யாருடனுடம் சண்டை சச்சரவு கிடையாது. அவன் பூ வியாபாரம் ஃப்ளாட் ஃபார்ம். ஆறு மாசத்துக்கு முன்னாடி அவனுக்கு மாணிக்கம் அண்ணன்தான், ”டேய் இவங்களுக்கு இங்கே பக்கத்துல தங்கறதுக்கு இடம் வேணுன்டான்னு” சொன்னவுடனே இவன்தான் ராஜூ அண்ணன் வீட்டை சஜஸ்ட் பண்ணினான்.

ஒரு ஆட்டோவில் ஒரு ட்ரங்க் பொட்டி, ஒரு சின்ன படுக்கை நாலஞ்சு பாத்திரம் என்று இறங்கின சுப்பக்காவிடம் ஒரு கம்பீரம்

இருந்ததைக் கவனிச்சாலும் ஸைலன்ட்டாக இருந்தான்.

ஏதோ ஒன்று சுப்பக்காகிட்ட ஒழுங்கு இருந்தமாதிரி தோன்றியது. ஒரு டப்பா ஃபோன் மட்டுமே கையில். நாலு மாசமா அதிகாலை 4.30 மணிக்கெல்லாம் எழுந்து ஒரு அம்பது வீடுகளுக்குப் பால் பாக்கெட் போட்டுக்கொண்டிருந்தாள். நிறைய தடவை மாரிக்குப் பூ தொடுக்கறதுல ஹெல்ப் பண்ணிக்கொண்டு இருந்தாள். ராத்திரி எட்டு மணிக்கு வீட்டுக்கு கிளம்பி விடுவாள்.

”மாரிதானேப்பா ஒம்பேரு. இங்கே யாராவது ஜெயமணின்னு இருக்காங்களா?”, சொன்னவன் ஒரு பாடி பில்டர் மாதிரி வலது

கன்னத்தில் ஒரு தழும்புடன். பார்த்தாலே ரௌடி என்று சொல்லி விடலாம்.

”நாந்தான் மாரி. ஜெயமணிங்கற பேர்ல இங்கே யாரும் இல்லையேப்பா!”

”இதைப் பாருப்பா நான் அவன்கிட்ட வாங்கியிருந்த ₹10000/- கடனைத் திருப்பித் தரத்துக்குக்குத் தான் வந்தேன். நாளைக்குக் காத்தால வரேன். அவன் வந்தான்னா இந்த நம்பர்ல நான் இருப்பேன். கூப்பிடு”, அப்படீன்னு சொல்லிட்டு ஒரு பேப்பரில் நம்பரை எழுதிக் கொடுத்துட்டு கிடுகிடுன்னு கிளம்பிட்டான். மாரிக்கு ஒன்னும் புரியல.

கொஞ்ச நேரத்தில் சுப்பக்கா வந்தவுடன் அவகிட்ட சொன்னவுடன் அவ மூஞ்சி பத்து செகன்ட் தாடையெல்லாம் இருக்கினதைப் பார்க்காமல் இட்லியை சாப்பிட்டான்.

சுப்பக்கா ,”மாரி நீ அவன்கிட்ட ஃபோன் பண்ணி ஜெயமணிகிட்டே பேசணும்னா இன்னிக்கு ராத்திரி ஒன்பது மணிக்கு  இந்த நம்பர்ல பேசச் சொல்லு.” சொல்லிட்டு கிடுகிடுன்னு கிளம்பிட்டாள்.

வீட்ல நுழைஞ்சு ட்ரங்க் பொட்டில இருந்து ஒரு ஃபோனை எடுத்து switch on பண்ணி இரண்டு மூன்று வார்த்தைகள் பேசினாள். கரக்ட்டாக ஒம்பது மணிக்கு ஃபோன் ஆன் பண்ணி கால் வந்ததுக்கு அப்புறம்,

”ஜெயமணி கிட்டே பேசணுமா? ஜங்ஷன் பக்கத்துல இருக்கிற பஸ் ஸ்டாப்ல பத்து நிமிஷத்துல வந்து நில்லு. நான் வந்து கூட்டிட்டுப் போறேன்” ஜங்ஷன் பஸ் ஸ்டாப்ல பாடி பில்டர் வந்தவுடன், ”வந்துட்டியா ஜெயமணி கிட்டே அழைச்சுட்டு போறேன் வா” ன்னு சொல்லி சுப்பக்கா, ”எவ்வளவு கட்டை?” என்று கேட்டாள்.



அந்த பாடி பில்டர் ”ஒங்கிட்ட எதுக்கு சொல்லணும்?”, ”சரி வா”ன்னு எதிர்ல இருந்த சந்துல நுழைஞ்ச வுடன் படாரென்று கரன்ட் கட் ஆக, ”என்னடா? ஜெயமணின்னு ஆம்பளை தான் இருக்கணுமா? பொம்பளை இருக்கக் கூடாதா?” சொல்லிண்டே, சுப்பக்கா அந்த பாடி பில்டரில் தோளில் ஒரு கராத்தே அடி அடிக்க, அவன் அலறிண்டே கீழே விழற சமயத்தில், பேக்கட்டில் கையை விட்டு ஒரு சின்ன சைனா கத்தியை எடுக்க, சுப்பக்கா புடவைல பின்னாடி மறைச்சு வெச்சிருந்த ஸைலன்ஸர் பொருத்தியிருந்த துப்பாக்கியை எடுத்து ட்ரிக்கரை  அழுத்த, அந்த பாடி பில்டர் தொடைல ஒரு குண்டு

பாயவும், ஒரு tempo traveller வந்து நிக்கவும் இரண்டு ராணுவ வீரர்கள் வந்து அவனை அள்ளிக் கொள்ள, அவர்களிடம்  இரண்டொரு வார்த்தைகள் பேச, சடுதியில் அவர்கள் வண்டியுடன் காணாமல் போனார்கள்.

சுப்பக்கா ஃபோனில் ”சார் மிஷன் அக்காம்பிளிஷ்டு. Waiting for your next order Sir” ன்னு சொல்லி ”எஸ் சார்” ன்னு சொல்ல அந்த ஃபோன்ல இருந்த சிம்மைத் தூக்கி போட்டுட்டு அடுத்த மிஷன் நோக்கி பயணித்தாள். இதுல மாரிக்கு தெரியாத விஷயம் என்னவென்றால் Indian Army ல் Military Intelligence Wing(Engineering) என்ற

பெயரில் இயங்கினாலும் அது ஒரு Elimination wing எப்போதும் கண்ணுக்கு தெரியாமல் இயங்கிக் கொண்டிருக்கும். இது மிலிட்டரி டாப் brassக்கு மட்டுமே தெரிஞ்ச சீக்ரெட்.

அந்த பாடி பில்டர் பெரிய பயங்கரவாதின்னு கண்டுபிடிச்சு அவன் போதைப் பொருள் ஆயுதங்கள் கடத்தறதா தகவல் வர, ஒரு பெரிய வலை விரிச்சு சிக்க வைக்கிறதுக்கு சுப்பக்கா மாதிரி நூற்றுக்கணக்கான அசாதாரணமான மனிதர்கள் தங்கள் குடும்பத்தை துறந்து விட்டு இந்தியாவிற்காக பணி புரிகிறார்கள் என்பதை நினைவில் கொள்ளுங்கள். பாரத் மாதா கி ஜெய்!

மறுநாள் சுதந்திர தின விழாவில் சுப்பக்கா ஒரு ஓரமாக நின்று, மாரிக்கு பதிலாக பூவை ஸ்கூலில் கொண்டு வந்து கொடுத்து யாரும் பார்க்காத நேரம் பார்த்து, ஒரு ஸல்யூட் கொடிக் கம்பத்துக்கு அடித்தாள்.

”மாரி என்னுடைய அம்மாக்கு தர்மபுரியில் கொஞ்சம் உடம்பு சரியில்லை. அதனால் புஷ்பாவை இனிமேல் பால் பாக்கெட் போடச் சொல்லிடு. நான் இப்போதைக்குத் திரும்பி வர மாட்டேன்”, அப்படீன்னு ஒரு மெஸேஜ் மட்டும் பண்ணிட்டு சுப்பக்கா என்கிற ஜெயமணி கிளம்பினாள்.

***********



# காவல் தெய்வம்

**சாரதா ஸ்ரீனிவாசன்**

மாதவன் இதோ இன்னும் இரண்டு நாட்களில் வேலைக்கு கிளம்ப வேண்டும். ஆர்மில ஆபிசர் ஆக இருந்த அவனுக்கு மனைவியும், இரண்டு குழந்தைகளும். மகன் ஆர்யா, மகள் ஆரா. அவன் லீவுக்கு சொந்த ஊர் வரும்போது அவனுடைய அப்பா மட்டும் உயிருடன் இருந்தார்.

வீட்டுக்கு வந்த ஒரு வாரத்தில் மனைவியையும் குழந்தைகளையும் அவன் கையில் பத்திரமாக ஒப்படைத்து விட்டுக்  கண்ணை மூடி விட்டார். இதோ இரண்டு மாத லீவு முடியப்போகிறது. ஆர்மில சேர்வது

தான் லட்சியம் என்று அம்மா அப்பாவின் பாசம், அழுகை எல்லாத்தையும் ஒதுக்கித் தள்ளிவிட்டு ஒடியவனுக்கு இப்போது இரண்டு நாளாக ஆர்மியில் இருந்து ஒய்வு பெற்று விடலாமா என்ற எண்ணம் மேலோங்கி நிற்கிறது.



நான் நாட்டை காப்பாற்ற போய் விட்டால் என் குடும்பத்தை யார் பார்ப்பார்கள்? என்  குழந்தைகளையும் என்  மனைவியையும் யார் பாதுகாப்பார்கள் என்ற எண்ணம்,

அவன் குடும்பம் மற்றும் பிள்ளைகளின் மேல் வைத்திருந்த பாசத்தால் இப்போது அவன் மனத்தில் ஓட ஆரம்பித்தது. இதே பாசத்துக்காகத்தான் அம்மா, அப்பா அவனை கெஞ்சினார்கள். தன்னை இப்போது அவன் அப்பா, அம்மா நிலையில் வைத்து பார்த்தான். எப்படியாவது மனைவியிடம் தன் குழப்பத்தையும், தான் எடுத்து இருக்கும் முடிவையும் இன்று இரவுக்குள் சொல்லிவிட வேண்டும் என்று நினைத்த அவன் வீட்டு திண்ணையில் அமர்ந்தான். “ஐயா”, என்ற குரல் கேட்டு நிமிர்ந்தான் கேசவன். தனது பதினெட்டு வயது பேரனுடன் நின்று இருந்தார்

அய்யாசாமி. “உங்களைப் பார்க்கவும், இந்த வருடம் நம்ம ஊரு சுதந்திரதினக் கொண்டாட்டத்திற்குக் கூப்பிடவும் தான் என் பேரனைக் கூட்டி வந்தேன்” என்றவர், பேரனிடம், “கோபி அய்யாவுக்கு வணக்கம் சொல்” என்றார்.

கோபி வணக்கத்துடன் நில்லாமல் நெடுஞ்ஜாண்கிடையாக மாதவன் காலில் விழுந்தான். மாதவன் அவசர அவசரமாக அவனை எழுப்பி நிறுத்தினான். “ஐயோ, ஏன்பா என் காலுல விழற. ஒரு மனிதன் மற்ற மனிதர்கள் காலில் விழுவது மிகவும் தப்புப்பா என்றவுடன், கோபி, “அய்யா என் தாத்தா சிறு வயதில் இருந்தே, வருடம் ஒரு முறை ஊர்

எல்லையிலேயே இருக்கற கருப்ப சாமி கோவிலுக்கு கூட்டிப் போவார். அவர் என்ன சொல்வார் தெரியுமா?

“இவர் ஊர்க் காவல்  தெய்வம்; நம் ஊருக்கு எந்த தீங்கும் வராமல் நம்ம ஊர் மக்களை காக்கர தெய்வம் விழுந்து கும்பிட்டுக்கப்பா” என்பார்; நான் இந்த காலத்து பையன் எனக்கு தாத்தா போல இதிலெல்லாம் நம்பிக்கை இல்லை, இருந்தாலும் தாத்தாவுக்காக செய்வேன். ஆனா உங்களை பார்த்த உடனே, வரும் போதே, “நாம பார்க்கப் போறவரு,  நம்ம நாட்டு எல்லையைக்  காப்பாற்றுகிறார்; நாமெல்லாம்  அதான் நிம்மதியாக இங்கு வாழ்ந்து கொண்டு இருக்கிறோம்”

என்று தாத்தா சொன்னது என் காதில் ஒலித்துக் கொண்டே இருந்தது. நீங்கள் இப்போது என் பார்வையில் அந்த கருப்பசாமியை விட உயர்ந்த-வராகத்தான் தெரிகிறீர்கள்.அதான் தாத்தா சொல்லாமலேயே உங்கள் காலில் விழுந்தேன். உங்கள் காலில் விழுவதற்கு நான் புண்ணியம் செய்து இருக்க வேண்டும். இன்னும் இரண்டு நாளில் நீங்கள் ஊருக்குக் கிளம்ப வேண்டும் என்று தாத்தா சொன்னார்.

நீங்கள் உங்கள் குடும்பம் பற்றிய கவலைகளை மறந்து எல்லைக்குச் செல்லுங்கள் sir; இந்த ஊர் உங்கள் குடும்பத்தின் மேல் ஒரு துரும்பு படாமல் காப்பாற்றும்”,

என்றவன், “தாத்தா உண்மை-யிலேயே நம் பாரதக்கொடி எல்லையில் ஒளி வீசிப் பறக்க காரணமாக இருக்கும் இவர் கையால் நம் தேசக்கொடியை ஏற்றச் சொல்வது இந்த வருடம் நமக்குக் கிடைத்த வரம்”, என்றதும், கேசவனும், “பேராண்டி சரியாக சொன்ன”, “ஐயா, நீங்கள் தான் கொடியேற்ற வேண்டும்” என்று அழைத்துவிட்டு இருவரும் கிளம்பினர்.

இதுவரை அவர்கள் பேசியதை எண்ணிப் பார்த்த மாதவனுக்கு மனதில் இருந்த தடுமாற்றம் மறைந்தது. என்னைப் போன்ற ராணுவவீரர்களை கண்ணுக்குத்

தெரியாத கடவுளுக்கு இணையாக
நினைக்கும் என் நாட்டு மக்களின் முன்
நான் ஏன் இப்படி சுயநல-மானவனாக
மாறினேன் என்று அவன் மனது
தவித்தது. சந்நியாசம் வாங்குபவர்கள்
“சம்சார வாழ்க்கை வாழ்ந்து பிறகு
வா அப்போது தான் சன்யாசம்
நிலைக்கும்” என்பார்கள்.

அது போலத்தான் தானும்; குடும்பம்,
குழந்தைகள் என்ற சக்கரத்தில் சுற்றி
ஆரம்பித்து
என் ஆர்மி வாழ்க்கைக்குள் வந்து
விட்டேன். இனி என் உயிர் மூச்சு
உள்ளவரை இதை விட்டு
வெளியேற மாட்டேன். நான் இந்த
மண்ணின் மைந்தன். இது என் தேசம்.
இந்த பாரத தேசத்தை என்

உயிர்மூச்சு உள்ளவரை காப்பேன்; என் குடும்பத்தை இந்த ஊர் மக்கள் காப்பாற்றுவார்கள் என்ற எண்ணத்துடன் தன் தடுமாற்றத்-தைப் போக்கிய அய்யாசாமி க்கும் அவர் பேரனுக்கும் மனமார்ந்த நன்றிகளுடன் எல்லைக்குச் செல்வதற்காகப் பெட்டியில் துணிகளை அடுக்கத் தொடங்கினான் .

*************



# ஊடக தர்மம்

## சத்யமூர்த்தி ராமானுஜம்

ரஜப் இந்தியாவின் அதிமுக்கிய செய்தி சானலின் அதி பிரபல முகம்."நோ... இது குப்பை... முழுப்பொய். இந்த விஷயத்தை நான் விவாதத்துக்கு எடுத்துக் கொள்ளமாட்டேன்" என்றான் ரஜப்.

"ரஜப்! இதோ பார்.. தேர்தல் வரப்போகிறது. நமக்கு விளம்பரங்கள் அவசியம். கட்சித் தலைவரே பர்சனலாக என்னிடம் பேசினார். வீடியோவைப் பார்த்தாயல்லவா? இதுதான் அவர்களுடைய முக்கியமான ட்ரம்ப்

கார்ட். இதை வெளியிட்டு விவாதம் செய்தால் டிஆர்பி எகிறும். இந்த தேர்தலில் நாட்டின் தலையெழுத் -தையே மாற்றிவிடும்”.

“அதுக்காக?”

“ரஜப்! புரியாததுபோல நடிக்காதே. அவர்கள் ஆட்சிக்கு வந்துவிட்டால் நமக்கு பல எக்ஸ்க்ளூசிவ் செய்திகள் கிடைக்கும். தலைவர் நன்றி மறப்பவர் இல்லை. அவருடைய பிரதமர் கனவு இந்த வீடியோவால் நனவாகிவிடும் என்று நினைக்கிறார்”.

“முடியாது! முடியாது! முடியாது! Now that you have told me the quid-pro-quo, இதை நிச்சயம் செய்யமாட்டேன். இந்த வீடியோவில் உண்மை இல்லை”.

“அது உனக்கும் எனக்கும் மட்டும்தான் தெரியும். காதும் காதும் வைத்தாற்போல் செய்துவிடு”.

மேற்கொண்டு ரஜப்பும் சேனல் உரிமையாளரும் என்ன பேசினார்கள் என்பதைத் தெரிந்து கொள்வதற்கு முன்பு கொஞ்சம் ரஜப் யார் என்று ஒரளவு பார்த்துவிடலாம்.

ரஜப் பெற்றோரிடம் ஜர்னலிசம் தான் வேண்டும் என்று பிடிவாதம் பிடித்து பொலிடிக்கல் சயன்ஸ் முடித்தவுடன் அப்போது பிரபலமான ஒரு சேனலில் சாதாரண நிருபராக வேலையைத் தொடங்கி அவனுடைய நம்பகத்தன்மையான செய்தி சேகரிப்பால் நல்ல பெயர் எடுத்து கொஞ்சம் கொஞ்சமாக

உயர்ந்து நியூஸ் ஆன்க்கராகி சேனல் மாறி தன்னுடைய தனி ப்ராண்டாக ஒரு அரசியல் விவாத ஷோ தொடங்கி அதன் மூலம் இந்தியாவின் செய்தி முகமானவன்.

இரவு ஒன்பது மணிக்கு IndiaQuest TVயில் ரஜப் நடத்தும் அரசியல் விவாதம் இந்தியாவில் மட்டுமல்ல, உலகம் முழுவதும் இந்தியர் -களிடையே பிரபலம்.

அன்றைய செய்திகளில் இருந்து சலித்து எடுத்து இரண்டு அல்லது மூன்று விஷயங்களை மட்டும் விவாதத்துக்கு எடுத்துக் கொள்வான். இரவு ஒன்பது மணிக்கான விஷயங்களை அவன் தேர்வு செய்யும்போது மாலை ஐந்து மணி

ஆகிவிடும். அதற்குப் பிறகு நியூஸ் ரூமில் பரபரப்புத் தொத்திக் கொள்ளும். அந்த செய்தியின் முழுப் பின்னணியும் ரஜப்பின் லேப்டாப்-புக்கு இரவு ஏழு மணிக்குள் அனுப்பியாக வேண்டும்.

சும்மா ஏனோதானோவென்று அனுப்ப முடியாது. விவாதத்துக்கு வரும் இருதரப்புகளின் நிலைப்பாடு என்ன, அவர்கள் என்ன பேசுவார்கள், எந்தெந்த தரவுகளைக் கொண்டு வருவார்கள் என்று ஆராய்ச்சி செய்து அந்தந்த கட்சிக்காரர்களுடன் ரகசியமாக பேசி விவரங்களைத் திரட்டி ரஜப்புக்குத் தரவேண்டும். அவனும் தனியாக ஆராய்ச்சி செய்து வைத்திருப்பான்.

உதவியாளர்கள் அனுப்பும் தரவுகள் தவறாக இருந்தாலோ, ஆழம் இல்லாததாக இருந்தாலோ கொஞ்சமும் தயவு தாட்சண்யம் இல்லாமல் காய்ச்சி எடுத்து விடுவான்.

“என் முகத்துக்காகவும், நான் சொல்வதில் உண்மை இருக்கும் என்பதற்காகவும்தான் இந்த சேனலைப் பார்க்கிறார்கள். எல்லார் முன்னாலும் என்னை கழுதையாக்கப் பார்க்காதீர்கள்” என்று சிங்கம் போல முழக்கம் இடுவான்.

விவாதத்தில் அனல் வீசும். ரஜப் தரவுகளைக் கையில் வைத்து ஆட்டியபடி, டேபிளில் ஓங்கித் தட்டி கேள்வி கேட்கும்போது, பதில் தர

முடியாமல் திணறியவர்கள் பலர். விவாதத்தில் ரஜப்புக்கு மாடரேட்டர் வேலைதான். ஆனால், இரண்டு தரப்புகளையும் தூண்டிவிட்டு, இருவருக்கும் அஸ்த்திரம் கொடுத்து ஒருவரை ஒருவர் முட்ட வைத்துத் திட்ட வைப்பதில் சமர்த்தன்.

அவனுடைய நிகழ்ச்சியில் அழைக்கப்பட்டவர்களைவிட, அவனே அதிகம் பேசுவான் என்கிற குற்றச்சாட்டு உண்டு. கேட்டால் “ஹே! மக்கள் என் முகத்துக்காக, நான் சொல்லும் பாயிண்டுகளுக்காகப் பார்க்கிறார்கள். இது வெறும் நியூஸ் படிக்கும் வேலை இல்லை, மக்களுக்கு இரு தரப்புப் பார்வை-யையும் தீவிரமாகக் கொடுக்க வேண்டும்” என்பான்.

“நான் எந்த சைடும் எடுக்க மாட்டேன். ஆனால் தேவையான போது நியாயத்தின் பக்கம் நிற்கத் தயங்க மாட்டேன்” என்பான். அஞ்சா நெஞ்சன். விவாதத்தில் யாராவது தவறியும் அவன் நேர்மையை கேள்விக்கு ஆளாக்கினால் துவைத்துத் தோரணம் கட்டிவிடுவான். இருந்தாலும் ஆனைக்கும் அடி சறுக்கும் அல்லவா?

ஒருமுறை அவன் நீதிபதி ஒருவர் செய்த தவறைப் பற்றி சேனலில் லைவ்வில் பேசும்போது வேறு நீதிபதியின் புகைப்படம் காட்டப் பட்டுவிட, நீதி மன்றம் கடுப்பாகியதில் அவனுடைய

தவறு இல்லாதபோதும், ரஜப் நீதி மன்றத்தின் கண்டிப்புக்கு ஆளாகி மன்னிப்புக் கேட்க வேண்டியதாயிற்று.

கூடவே நீதிமன்றம் இவனுடைய சேனல் கொடுத்த நியாயமான காரணங்களை ஏற்காமல், “இது மாதிரி நியூஸ் போடும்போது குற்றவாளிக்கு பதில் ரஜப்பின் படத்தைக் காட்டி விடுவீர்களா?” என்று கடிந்து கொண்டு ஐந்து கோடி அபராதம் போட்டுவிட்டார்கள்.

அந்த சேனலுக்கு ஐந்து கோடி பெரிய தொகை இல்லை. நாலு நாள் அட்வர்டைஸ்மெண்ட்டில் வந்துவிடும். ஆனால், மற்ற சேனல்கள் இதையே சாக்காக வைத்துக்கொண்டு

ரஜப்பின் நம்பகத் தன்மையை சரிக்கப் பார்த்தன.

ஆனால், ரஜப் பனங்காட்டு நரி. இந்த நெகடிவ் விஷயத்தையே திருப்பிப் போட்டு “தவறு நடந்து விட்டால் எங்களைப்போல நேர்மையாக மன்னிப்புக் கேட்கும் சேனல், எங்கள் IndiaQuest TV போன்ற சேனல், உலகத்திலேயே இல்லை” என்று விளம்பரம் செய்து தன்னுடைய இமேஜ் மாறாமல் வைத்திருந்தான்.

அவனிடம்தான் உரிமையாளர் கெஞ்சிக் கொண்டிருந்தார் “காதும் காதும் வைத்தது போல செய்துவிடு”. இவன் கொஞ்சம் யோசிக்க, “ரொம்ப யோசிக்காதே. இவர்கள் பதவிக்கு வந்துவிட்டால் உனக்கு மேனேஜிங்

டைரக்டராக பதவி உயர்வு. நான் சேர்மனுக்கு மாறிக் கொள்கிறேன். இந்த சேனலை உன் இஷ்டம் போல நடத்திக் கொள்ளலாம். சம்பளம் இப்போதை விட மூன்று மடங்கு. எம்டி-யானதும் லாபத்திலும் பங்கு.” ரஜப் வாய்க்கு அருகில் தேனில் முக்கிய பலாச்சுளை ஊசலாடியது. ரஜப் மொபைலில் அந்த வீடியோவை மீண்டும் பார்த்தான்.

ஒரு பெண் இன்னொரு பையனுடன் சாலையில் நடந்து கொண்டிருக்க, எங்கிருந்தோ ஓடிவந்த மூன்று பேர், அவர்கள் உடையில் அவர்களுடைய மதம்  பட்டவர்த்தனமாகத் தெரிந்தது. அந்தப் பையனை மட்டும் தனியே

இழுத்து அடிக்கிறார்கள். அந்தப் பெண், "சகோதரர்களே அவனை ஒன்றும் செய்யாதீர்கள். எனக்கும் அவனுக்கும் எந்த உறவும் இல்லை. நாங்கள் ஒன்றாகப் படிக்கிறோம், அவ்வளவுதான்" என்று கதற, தாக்கிக் கொண்டிருந்த மூன்று பேரில் ஒருவன் மியூட் செய்யப்பட வேண்டிய சில வார்த்தைகளைச் சொல்லி அவளைத் திட்டியபடி ஆளுங்கட்சித் தலைவரின் படத்தைக் காட்டி "இந்த மாதிரி மாபெரும் தலைவரின் ஆட்சியில் உங்களைப் போன்ற கலாச்சார துரோகிகளுக்கு இதுதான் சரியான பாடம்", என்றபடி அவள் கூடவந்த இளைஞனை மீண்டும் அடிக்கிறான்.

அந்தப் பெண் அவன் காலில்

விழுந்து கதறிக் கெஞ்ச, அவளைக் காலால் உதைத்துத் தள்ளியபடி கைகளை உயர்த்தி கோஷம் போடுகிறார்கள்.

“இல்லை சார், முடியாது. இந்த வீடியோ உண்மையாக இருக்க முடியாது. இது ஜோடிக்கப்பட்டது. இந்த பொய்யான வீடியோவை வெளியிட்டால் நாட்டில் நல்லிணக்கம் பாதிக்கப்படும். ஏற்கனவே ஒற்றுமை ஊசலாடிக் கொண்டிருக்கிறது. ஒருவரின் தேர்தல் வெற்றிக்காகச் செய்யும் சூழ்ச்சிக்கு, நாம் பலியாகக் கூடாது” என்றான்.

“அதெப்படி இந்த வீடியோவை இரண்டு முறை பார்த்ததுமே இது ஜோடிக்கப்பட்டது என்கிறாய்?”

“சார்! இதில் வரும் பெண் சில விளம்பரப் படங்களில் நடித்திருக்கிறார். அந்தப் பையனையும் ஒரு டிவி சீரியலில் பார்த்திருக்கிறேன். அந்த மூன்று அடியாட்கள் சினிமா ஸ்டண்ட் நடிகர்கள். அவர்கள் வசனம் பேசிப் பழகாதவர்கள். அவர்கள் மிரட்டல் விடும் தொனியைப் பாருங்கள். கோபமாக வசனம் பேசிவிட்டு, வேறு யாரையோ பார்த்துத் தலையாட்டுகிறார்கள்”.

“சபாஷ் ரஜப்! நான் வைத்த டெஸ்ட்டில் நீ தேறிவிட்டாய்”, என்றார் உரிமையாளர்.

“டெஸ்ட்டா? என்ன சார் சொல்றீங்க?”

“அதுவா? நீ இப்ப நாட்டின்

முக்கியமான சேனலில் முக்கிய ஷோ நடத்துகிறாய். நேற்று தலைமை தேர்தல் அதிகாரி என்னிடம் பேசி, “ரஜப் எப்படி? பணத்துக்கு விலை போய்விடுவாரா? அவர் மாதிரி ஆட்கள் பணம் வாங்கிக் கொண்டு ஷோ நடத்தி மக்களை மனம் மாற்ற முடியும்தானே? அப்படி ஆனால் தேர்தல் எப்படி நேர்மையாக நடக்கும்?” என்றார்.



“எனக்கு உன் மேலும், உன் நேர்மையின் மேலும், நீ தேசத்தின் மேல் வைத்திருக்கும் பற்றின் மேலும் கொஞ்சமும் சந்தேகமில்லை. இருந்தாலும், அவருக்காக ஒரு பரீட்சை வைத்தேன். தேறி விட்டாய். என் நம்பிக்கை வீண் போகவில்லை”.

“நல்லவேளை சார். நீங்கள் மட்டும் இதை நிஜமாகச் சொல்லியிருந்தால், இவ்வளவு நேரம் நான் வேலையை ராஜினாமா செய்திருப்பேன். என் நாட்டை விட, நாட்டின் ஒற்றுமையை விட வேறு எதுவும் எனக்கு முக்கியமில்லை. சரியான செய்தி தருவது மட்டும் ஊடக தர்மமல்ல சார். தவறான செய்தி பரவி நாட்டின் ஒற்றுமைக்குக் குந்தகம்

வராமல் தடுப்பதும் நம் போன்ற ஊடகங்களின் கடமைதானே?” என்றான்.

“உன்னைப்போல ஊடகவியலாளர் இருந்தால் நாட்டின் ஒற்றுமைக்கு ஒரு குந்தகமும் வராது. எனக்கு மிகவும் பெருமையாக இருக்கிறது ரஜப். ஜெய் ஹிந்த்!”

“ஜெய் ஹிந்த்” என்றான் ரஜப், பெருமையுடன்.

******************

# குல தெய்வம்



**தமிழ்ச்செல்வன் ரத்தினபாண்டியன்**

1971

இந்திய வங்காள தேச எல்லையில் இந்தியாவின் கடைக்கோடி கிராமங்களில் ஒன்றில், குமரன் நாற்காலியில் கட்டி வைக்கப்பட்டு கன்னத்தில் மாறி மாறி அறை வாங்கிக் கொண்டிருந்தான். சுற்றி நின்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தனர் பத்து பதினைந்து பேர். நிறையப் பேர் 1971 வங்காளப் பிரிவினை நேரம், கிழக்கு வங்காள நாட்டிலிருந்து இந்தியாவில் அமைதியாக வாழக் குடி

புகுந்தவர்கள். கல்கத்தா பக்கம் கிருஷ்ணா நகர் மாவட்ட கிழக்கு எல்லை பிரஜைகள்.

குமரன் சென்னையிலிருந்து வங்காளம் மிசோராம் மணிப்பூர் திரிபுரா என சேலை வியாபாரம் பண்ணுகிறவன். காஞ்சிப் பட்டும் சுங்கடியும் விற்பவன். போன முறை விற்ற சுங்கடிச் சேலை ஒன்று சீக்கிரம் சாயம் போனதால், கிராமத்து இளைஞன் பார்த்தோ கங்குலி கோபத்தில் இருந்தான். அவனும் அவன் நண்பர்களும் குமரனிடம் முழு விலையையும் திருப்பிக் கொடுக்க கத்திக் கொண்டிருந்தனர்.

குமரன் ”எப்பவாவது இம்மாதிரி நடக்கலாம்; நானும் சின்ன வியாபாரிதானே. பண வசதி இல்லாதவந்தானே. வாங்கியதைத் தானே விற்கிறேன். வேணுமென்றால் பாதி விலை தருகிறேன்” என கெஞ்சினான்.

பார்த்தோ இறங்கி வரவில்லை. அவனுக்கு ஒரு மதறாஸி தங்களை ஏமாற்றியது போல எண்ணம். 1971 பிரிவினையின் போது கிழக்கு வங்காளத்தில் சொத்துக்களை கைவிட்டு விட்டு வெறும் கையில் உழைப்பை நம்பி மேற்கு வங்காளத்தில் குடி புகுந்தவர்கள் அவன் தந்தையும் தாத்தாவும். இனி வாழ்க்கையில் அடிபடக்கூடாது;

ஏமாறக்கூடாதென தீர்க்கமாய் சதுரங்க வீரனைப் போல எண்ணுபவன் அவன்.



அவன் ஆசையோடு தனது தாய்க்கு பிறந்த நாளுக்கு வாங்கிக் கெடுத்த சேலை நிறம் லேசாக மங்கிப் போனதற்கு அவ்வளவு ரெளத்ரம் மனதில் பிரம்மபுத்ரா போல பொங்கிக் கொண்டிருந்தது.

குமரனின் நல்ல நேரம் வெளியே போயிருந்த பார்த்தோவின் தாத்தா உள்ளே வந்தார். உன்னிப்பாக குமரன் முகத்தைக் நோக்கினார். கடவுள் பிள்ளைகளையும் பேரன்களையும் தந்தை தாய் தாத்தா பாட்டி சாடையில் பிறக்க வைப்பது  குமரனுக்கு அன்று மேலும் பூசை
விழாமல் மீட்டுக் கொடுத்தது.

”தம்பி.. நீ யாரு. உங்கப்பா தாத்தா பேரென்ன. எங்கேயோ பார்த்த

மாதிரி இருக்கே” என வங்காளத்தில் பேசினார். குமரனும் தனக்குத் தெரிந்த வங்காளத்தில் ”அப்பா நல்லசாமி, தாத்தா பொன்னுச் சாமி, ஊர் மதுரை” என ஈனக்குரலில் முனகினான்.

பொன்னுச்சாமி பேரைக் கேட்டவுடன், பார்த்தோ கன்னத்தில் மின்னல் போல அவர் கை இறங்கியது. பார்த்தோவுக்கு வாழ்க்கையில் அடின்னா என்ன என்று அன்றுதான் புரிந்தது.

”இவனை யாரென்று நினைத்தாய்.... நம்ம குல தெய்வத்தின் பேரன்டா.... மன்னிப்பு கேள்டா” என உறுமிக் கொண்டு குமரனின் கைக்கட்டுகளை அவிழ்த்து அவனைக் கட்டி அணைத்தார் தாத்தா கங்குலி.

கேட்டுக் கொண்டிருந்த அனைவருக்கும், குமரன் உட்பட, யாருக்கும் ஏதும் புரியவில்லை. பெரிசு உள்ளே வந்து தன் தாத்தாவை குல தெய்வம்ங்கிறார். குமரன் ஆனந்த அதிர்ச்சியில் நின்றான்.

” சாப்பிட ஏதாவது குடு”, உள்புறம் மகளிடம் கத்தினார் கங்குலி.

” உங்க தாத்தா 1971 சண்டையிலே எங்க கிராமத்துல நிறைய பொம்பளைங்க மானத்தைக் காப்பாத்துன தெய்வம். பார்த்தோவின் அம்மாவின் கற்பை எதிரி களிடமிருந்து காப்பாற்றின குலதெய்வம்.

நூற்றுக்கணக்கான பெண்கள் கற்பை இழந்து பரிதவித்துக் கண்ணீரும் கம்பலையுமாக நின்று தங்கள் எதிர் காலம் என்ன ஆகும்? என ஆத்துத் தண்ணீ மழை பெய்யும் போது கலங்கிற மாதிரி நின்னபோது. இந்திய ராணுவத்தினர்தான் எங்களைக் காப்பாற்றியது.

மானமே பெரிசுன்னு, போதும் கிழக்கு வங்காள வாழ்க்கைனு இங்கே குடி வந்தோம் நாம. பெண்களின் கற்பைக் காப்பாற் -றுவது நாட்டைக் காப்பாற்றுவதற்கு ஈடாகும்” என கண் கலங்கி 1971 நினைவில் நாற்காலியில் துணி விழுவது போல விழுந்து கேவிக்கேவி அழ ஆரம்பித்தார் கங்குலி.



# காக்கும் கரங்கள்

## லீலா ராமசாமி

இந்திய உளவுத்துறை ’ரா’ (RAW - Research and Analysis Wing) வின் அலுவலகம். அதன் தலைவர் ஆனந்த் கோயலிடமிருந்து ரா’வின் தலையாய உளவாளிகளான அருணுக்கும் பிரீத்தி குப்தாவுக்கும் செய்தி வந்திருந்தது. அவர்கள் இருவரையும் தலைவர் அழைத்திருந்தார்.

இருவரும் ஒரே நேரத்தில் ஆனந்த் கோயலின் அறைக்கு வெளியே வந்து நின்றிருந்தார்கள். அவருடைய அறைக் கதவுக்கு வெளியே காத்திருந்த நேரத்தில் பிரீத்தி, அருணிடம் ’என்ன விஷயம்’ என்று

கண்களாலேயே வினவினாள். அருண் தனது அகன்ற தோள்களைக் குலுக்கி உதட்டைப் பிதுக்கித் தனக்கும் தெரியாது என்று மௌனமாகவே விடை கொடுத்தான்.

ஆனந்த் கோயலின் அறைக்கதவு திறந்து இருவரையும் உள் வாங்கியது. 'ரா' தலைவர் அவர்களைத் தமது தலையசைப்பால் வரவேற்றார். அவருடைய முகம் சலனமில்லாமல் இறுகி இருந்தது. இருவரும் அவருக்கு விறைப்பாக சல்யூட் செய்ய, தமக்கு எதிரே இருந்த இருக்கைகளைக் காட்டினார்.

தமது மேசையில் விரிக்கப் பட்டிருந்த ஒரு வரைபடத்தைக் காட்டி விளக்கிச் சில இடங்களில்

சிவப்பு வட்டமிட்டுக் காட்டினார். அவர்கள் இருவரும் செய்ய வேண்டியவற்றை விளக்கியபின் அவர்களைக் கைக்குலுக்கி வாழ்த்தினார். இருவரும் ஒரு விறைப்பான சல்யூட்டை அவருக்கு வழங்கிவிட்டு விடைபெற்றனர்.

புது டெல்லி. சன்சத் பவன் எனும் நாடாளுமன்ற கட்டடம் கம்பீரமாக நிற்கும் ராஜ்பத் சாலை. கடந்த இரண்டு நாட்களாகவே ஒரு மனநலம் பாதித்த இளம்பெண், அழுக்கு உடையணிந்து பிச்சைக்காரி போன்ற தோற்றத்தில் பார்லிமென்ட் கட்டடத்தின் வெளியேயுள்ள அந்த இடத்திலேயே சுற்றிக் கொண்டிருந்தாள். சில நேரங்களில் இந்தியா கேட்

பகுதியிலும் காணப்பட்டாள்.



அழகான ஓவியத்தைப் புழுதியில் புரட்டி எடுத்ததைப் போன்ற தோற்றத்தைக் கொடுத்தாள். தலைமுடி பராமரிக்கப் -படாமல், பரட்டையாய் காணப்பட்டது. யாரையும் எதையும் கேட்டு தொந்தரவு கொடுப்பதில்லை.

போவோர் வருவோர் தரும் உணவை வாங்கி உண்டாள். இரவில் அங்கிருந்த அந்த ஒரு மேடான இடத்தில்தான் தூங்கினாள்.

கிருஷ்ண பட்சத்து இரவில் தூரத்தில் நிழலோவியம் போல பாராளுமன்றக் கட்டடம் கம்பீரமாகத் தெரிந்தது.

ஏதோ ஒரு வெளிச்சத்தில் அந்த மேடான திண்ணை போன்ற இடத்தில் படுத்திருந்த அவளுடைய வாழைத் தண்டு கால்கள் தெரிந்தன.

இரண்டு பேர் அவள் படுத்திருந்த இடத்தருகே வந்து நின்றனர். அவளைப் பார்த்துவிட்டு, மெதுவாக உருது மொழியில் பேசிக் கொண்டனர்.

”நம்ம வேலையை முடிச்சிட்டு வந்து முதல்லே இவளைத்தான் கவனிக்கணும்.”

”நாம செயல்பட வேண்டிய நேரம் நெருங்குது. அதுல கவனமா இரு. இவளைப் பிறகு பாத்துக்கலாம். அது பத்திரமா இருக்கா? சரியா வேலை செய்யுமா? செக் பண்ணிட்டியா?”, என்று ஒருவன் சந்தேகம் எழுப்பினான்.

அடுத்தவன், ”நானே செக் பண்ணித்தான் எடுத்துட்டு வந்தேன். இப்ப சரியான நேரம். நாம சமிக்ஞை காட்ட ஆரம்பிக்கலாம்.”

என்றவன், தனது பாண்ட் பையிலிருந்து ஒரு பொருளை (விஸ்வரூபம் படத்தில் பின்லேடன் மறைந்திருக்கும் இடத்தைக் காட்ட, கமல் சமிக்ஞை செய்வாரே, அதே கருவிதான்) எடுத்து வானை நோக்கி

ஆட்டத் தொடங்....

அந்தப் பிச்சைக்காரி திடீரென்று ஏதோ சத்தமாகப் பிதற்றிக்கொண்டே கால்களை உதறினாள். அவள் கால் பட்டு அந்தக் கருவி தூரத்தில் சென்று விழுந்தது.

இருவரும் கோபமாக அவளை நோக்கித் திரும்பிக் குனிய, அவள் கண்ணிமைக்கும் நேரத்தில் தன் இரு கைகளையும் அவர்கள் இருவர் கழுத்திலும் பாய்ச்ச, அவர்கள் வேரறுந்த மரங்கள் போன்று சாய்ந்தார்கள். இருவர் கழுத்திலும் விஷ ஊசிகள் பாய்ந்திருந்தன.

மின்னலைப் போல் பாய்ந்து அந்தக் கருவியை எடுத்துத் தன் உடையில் மறைத்தாள். மெல்லிய குரலில் ஏதோ

அவளாகவே பேசிக் கொண்டது போல் பேசினாள். அவள் கூந்தல் காற்றில் விலகிய போதுதான் அவள் காதுக்குள் பொருத்தியிருந்த சிறு மைக்ரோஃபோன் தெரிந்தது.

சற்று நேரத்தில் வானில் ஒரு பெருஞ்சத்தம் கேட்டது. அவள் அந்தச் சத்தம் வந்த திசையை நோக்கிப் பார்த்தபோது, வானில் ஒரு தீப்பிழம்பு எரிந்து அடங்கியது.

”வெல் டன் அருண்! நம் வேலை கச்சிதமாக முடிந்தது. நாம் சாதித்து விட்டோம்.” என்று மகிழ்ச்சியாக மைரோஃபோன் மூலமாக அருணிடம் பேசினாள். அவள் பிரீத்தி குப்தா!

பத்து நிமிடங்களில் ஒரு ராணுவ வண்டி அங்கு வந்தது. அதில்

இருந்தவர்கள் கீழே கிடந்த இரு உயிரற்ற உடல்களைத் தூக்கி உள்ளே போட்டார்கள். பிரீத்திக்கு ஒரு சல்யூட் அடித்தனர். பின்னால் வந்த ராணுவ ஜீப்பில் பிரீத்தி குப்தா ஏறிக்கொண்டாள்.

மறுநாள்.

’ரா’ தலைவருடன் அருணும் பிரீத்தி குப்தாவும் பிரதமரின் முன் அமர்ந்திருந்தார்கள்.

பிரதமர் மகிழ்ச்சியுடன் அவர்கள் கைகளைப் பிடித்துக் குலுக்கினார். ஆனந்த் கோயலைப் பார்த்துக் கேட்டார்:

”என்னுடைய மனமார்ந்த பாராட்டுக்கள். எப்படி இவ்வளவு அருமையாக இதைச் சாதித்தீர்கள்?”

ஆனந்த் கோயல் கூறத் தொடங்கினார்:

”சென்ற வாரம் மீண்டும் பாராளுமன்றக் கட்டடத்தைத் தாக்குவதற்குத் திட்டம் வகுத்துக் கொண்டிருப்பதாக எனக்கு ஒரு ரகசியச் செய்தி கிடைத்தது.

ஏற்கனவே 2001ஆம் ஆண்டு டிசம்பர் 13 ஆம் தேதியன்று நமது இந்திய பாராளுமன்றக் கட்டிடத்தின் மீது தீவிரவாதிகள் துப்பாக்கிச் சூடு நடத்தியதில் 12 பேர் உயிரிழக்க நேர்ந்தது.

சென்றமுறை தரை வழியாக வந்து துப்பாக்கிச் சூடு நடத்தினார்கள். தற்போது வான்வழித் தாக்குதல் நடத்த இருப்பதாக ரகசியத் தகவல்கள்

தெரிவித்தன.

தீவிரவாதிகள், சுதந்திர தின விழாவன்று நம் இந்திய நாட்டின் அமைதியைக் குலைத்து அதன் இறையாண்மைக்குப் பங்கம் விளைவிக்கப் பல்வேறு தாக்குதல்களை நாடு முழுவதும் நடத்துவதற்குத் திட்டம் தீட்டியுள்ளதாகத் தெரிய வந்தது. அதில் முக்கியமானது நம் நாடாளுமன்றக் கட்டடத்தைத் தகர்ப்பது. அந்த நாச வேலையை  முறியடிக்கும் பணியை ஏற்று  அருணும் ப்ரீத்தி குப்தாவும் புறப்பட்டார்கள்.

ப்ரீத்தி பைத்தியக்காரப் பிச்சைக்காரி வேடத்தில் பிரமாதமாகக் கண்காணித்துப்  பாராளுமன்றக்

கட்டடத்தின் இருப்பிடத்தைச் சமிக்ஞை மூலம் தெரிவிக்க இருந்தவர்களைத் தடுத்து, அவர்கள் கதையை முடிக்கும் வேலையைச் சாதித்தாள். அவள்தான் அவ்வப்போது அருணுக்குத் தகவல்களை அனுப்பினாள்.

மற்றோரிடத்திலிருந்து, நம் பாராளுமன்றக் கட்டிடத்தை அழிப்பதற்காக, ரேடார் கண்காணிப்பையும் குழப்பி, மறைந்து வந்துகொண்டிருந்த அந்த நாசகார விமானத்தைக் கண்காணித்துக் கண்டறிந்து அதை வானிலேயே சுட்டுப் பொசுக்கினார் அருண்.

இவர்கள் இருவரும்தான் இதைச் செய்து இந்த அற்புதத்தைச் சாதித்தார்கள்”.

”நாங்கள் வெறும் கருவிகள்தான். நாங்கள் செயல்பட மூளையாக இருந்தவர் எங்கள் தலைவர்தான்” என்று அருண், பிரீத்தி குப்தா இருவரும் ஒரே குரலில் கூறினார்கள். ” அவர் போட்டுக் கொடுத்த திட்டத்தை நாங்கள் சரியாகச் செயல் படுத்தினோம். அவ்வளவுதான்.”

”உங்கள் சாதனைக்காக இந்த நாடே கடமைப் பட்டிருக்கிறது. உங்கள் உயிரையும் துச்சமாக நினைத்து இதைச் சாதித்த உங்கள் இருவரின் வீரச் செயல்கள் வெளி உலகத்துக்குத் தெரிய வரப்போவதில்லை.

வெளியில் பெயர் வ’ரா’ காக்கும் கரங்கள் நீங்கள்! உங்கள் தீரச் செயலுக்கும், தியாகத்துக்கும் எந்த விருதையும் உலகறிய கொடுத்துப் பாராட்டவும் முடியாது. இந்தத் தேசத்தின் சார்பாக எங்கள் நெஞ்சார்ந்த பாராட்டுக்கள்.” என்று பிரதமர் அவர்கள் இருவரின் கைகளைப் பிடித்துக் குலுக்கினார்.

*************



# விடுதலை

**ஸ்வாமிநாதன் சேதுராமன்**

நமது பாரதத்தின் உயிர் நாடியான எழில் மிகு கிராமங்களில் ஒன்றான மேலமங்கலம் கிராமம். காவிரி ஆறும் அதன் கிளை வாய்க்கால் பாசன கிராமம். ரம்மியமான ஒன்று.

அன்று மாலை ஐந்து மணியிருக்கும். முன்னாள் ராணுவ வீரர் போஸ் அந்த கிராமத்தில் ஒரு சின்ன பெண்ணான பாரதியை கை பிடித்து கொண்டு வேக வேகமாக நடந்து கிராமத்து மக்கள் பெரியவர்கள் மாலையில் கூடும் ஆல மரத்தடியருகே வந்தார். படபடத்துக் கொண்டிருந்தார்.

”நான் இந்தப் பெண்ணை, நம் பாரதியைக் காப்பாற்றி விட்டேன்”

”என்ன சொல்றீங்க போஸ்?”, கிராமத்தின் தலைவர் கேட்டார்.

”ஆமாம். நான் ராணுவத்திலிருந்து ஒய்வு பெற்று வந்த இந்த ஒரு வருடத்திலேயே, நமது கிராமப் பள்ளியிலிருந்து சிறுமிகள் விலக்கி கொள்ளப்படுகிறார்கள், பள்ளி -யிலிருந்து நின்று விடுகிறார்கள் என அறிந்தேன். ஆனால் அந்தச் சிறுமிகளோ, இல்லை அவர்களின் பெற்றோர்களோ, ஏன் சிறுமிகளை பள்ளிக்கு அனுப்பவில்லை, என்ன காரணம் என வெளியே சொல்ல பயந்தார்கள்.

அரசல் புரசலாக சில பேச்சுகள். சில புரளிகள். மாணவர்கள் சரி இல்லை . மாணவிகளிடம் வம்பு செய்கிறார்கள் அது இது என.

நான் இதை கண்டுபிடிக்கணும், தப்பு எங்குள்ளது, காரணம் யார் என ஆறு மாதமாக யோசனை செய்து கொண்டிருந்தேன். இந்த விஷயம் என்ன அதற்கு காரணம் யார் என மெதுவாக ஆராயத் தொடங்கினேன்.

சமீப காலமாக பள்ளியிலிருந்து நின்று விட்ட சிறுமி அவர்கள் பெற்றோர் குடும்பத்தார் தோழிகளிடம் விசாரித்தேன்.

யாரும் எதுவும் சொல்லவில்லை . நம்ம கோவில் பூசாரி மந்திரித்து விட்டால் எப்படி இருப்பார்களோ

அப்படியே இருந்தார்கள்.



காரணம் யாராக இருக்கும் எதுவாக இருக்கும் என எனக்கு புலப்படும் பொழுது, அதற்குத் தகுந்த ஆதாரங்கள் கிடைக்க வில்லை .

இன்று வரவிருக்கும் சுதந்திர தினத்தின் முன் நமது பள்ளியில் இருக்கும் கொடிக்கம்பம் கொடி ஏற்றும் வளாகத்தை சுத்தம் செய்யலாம் என நம்ம பள்ளிக்குச் சென்றேன். பள்ளி நேரம் முடிந்திருந்தது. உள்ளே சென்று பார்த்த பொழுது இந்த சிறுமியின் குரல் கிணற்றுக்குள்ளிருந்து வருவது

போல் ஒரு வகுப்பறையிலிருந்து கேட்டது.

’வேண்டாம் என்னை விட்டு விடு’, என இந்தச் சிறுமி சன்னமாக அழுது கொண்டிருந்தாள்.

வகுப்பறை கதவை உதைத்து திறந்து உள்ளே பார்த்தேன். ஒரு ஆண்மகன் சற்றே கலைந்த தன் உடைகளுடன் இந்த பெண் பக்கத்தில் நின்று கொண்டிருந்தான்.

என்னவென்று புரிந்து கொண்டேன் . கோபத்துடன் அவன் பின்புறமாகச் சென்று அவன் கழுத்தைப் பிடித்து நான்கு அறை சாத்த, அவன் அதையும் மீறி என்னை அடிக்கக் கை ஓங்க, நான் கோபத்துடன் அவனைத் தள்ளி விட்டேன் .

இராணுவத்தில் உழைத்துப் பயின்று துப்பாக்கிகளை தூக்கிய கைகள் அல்லவா? அத்தனை பலம்!

நான் விட்ட உதையில் அந்த அரக்கன் நேரே ஒரு பெஞ்ச் முனையில் இருந்த கூர்மையான மூலையில் தலை மோதி கீழே விழுந்து விட்டான். அருகே சென்று பார்த்தேன். தலையிலிருந்து ரத்தம் சிந்த அவன் செத்து கிடந்தான். அதான் உங்களிடம் நடந்தததை சொல்லலாம் என இந்தச் சிறுமியையும் அழைத்துகொண்டு வந்தேன்.

கயவர்களை நயவஞ்சகர்களை நம் நாட்டின் பாதுகாப்புக்கு பங்கம் விளைவிக்கும் எதிரிகளை

ராணுவத்தில் நம் தேச பாதுகாப்பு சேவையில் கொன்றால், விருது கிடைக்கும். ஆனால் நான் இப்ப ஒய்வு பெற்ற ராணுவ வீரன் . என்ன தான் இந்த சிறுமியைக் காப்பாற்ற நான் அவனைக் கோபத்தில் தள்ளி விட்டாலும், அவன் படக்கூடாத இடத்தில் அடிபட்டு இறந்து விட்டான். அது கொலைக்குச் சமம் தான் .

ஆனால், எனக்கு இதில் ஒரு பெருமை, கௌரவம். ராணுவத்தில் பணி புரிந்திருந்தாலும் நம் நாட்டு எதிரிகளை அழிக்க எனக்கு ஒருவாய்ப்பும் கிடைக்கவில்லை என்று எப்பொழுதும் ஒரு ஏக்கமும், ஏமாற்றமும் இருந்துகொண்டிருந்தது.

அந்த ஏக்கம் இன்று நிறைவுற்றது. எனக்கு ஒரு விதத்தில் மகிழ்ச்சி.

நான் நமது கிராமத்தை, கிராமத்தில் இருக்கும் சிறுமிகளை, பெண்களைக் காப்பாற்றி விட்டேன். அவர்கள் படிப்பு, கல்விக்கு இடையூறாக இருந்த அந்த எதிரியை, கயவனை, அரக்கனை அழித்து விட்டேன்".

தலைவர் வாய் திறந்தார்.

"யார் அந்தக் கொடியவன்? யாரை நீங்கள் அழித்தீர்கள்?"

"அந்தப் பள்ளியில் பியூனாக வேலை பார்க்கும் என் ஒரே மகன் ராஜாராமைத் தான்".

"என்ன?"

”ஆமாம் அவனே தான். நம் நாட்டின் பெண்கள் வாழ்வில் சீர் திருத்தம் கொண்டு வரணும் அவர்களும் முன்னேறணும் என முதல் முதலாகப் பாடுபட்டாரே, ராஜா ராம் மோகன் ராய் அவர் நினைவாகத்தான் நான் அவனுக்கு அந்தப் பெயரை வைத்தேன்.

ஆனால் படுபாவி, பெண்களுக்கு காவலாக இருப்பான் என நினைத்தால், அவனே நம் கிராமத்துப் பெண்களுக்கு அவர்கள் கல்விக்கு, கல்வியால் வரும் அந்தச் சிறுமிகளின் முன்னேற்றத்துக்குத் தடைக் கல்லாக இருந்திருக்கானே. வருத்தமில்லை. அழுகை வரவில்லை.

அவனை நான் அழித்ததில் தப்பில்லை. ஒரு ராணுவ வீரனாக நமது கிராமத்துக்கு, நான் பிறந்து வளர்ந்த இந்த கிராமத்தின் பெண்களுக்கு, சிறுமிகளுக்கு, அவர்கள் கல்விக்கு, இன்று முதல் பாதுகாப்புக்கு உறுதி செய்து விட்டேனே, அது போதும் எனக்கு.

தலைவர் அய்யா நம்ம ஊர் போலிசுக்கு தகவல் சொல்லி விடுங்கள் . என்னை வந்து அழைத்து கொண்டுபோவார்கள். அதுவரை நான் இங்கேயே காத்துக் கொண்டிருக்கேன் . நமது சட்டங்கள் என்ன செய்யணுமோ என்ன தண்டனை கொடுக்கணுமோ எனக்குக் கொடுக்கட்டும்”.

தலைவர் போலீசுக்குத் தகவல் சொல்ல ஆள் அனுப்பினார்.

முன்னாள் ராணுவ வீரர் போஸ், தன் கிராமத்தை, கிராமத்துச் சிறுமிகளை ஒரு எதிரியிடம், கயவனிடமிருந்து காப்பாற்றிய பெருமையில் அங்கிருக்கும் சிறுவர் சிறுமிகளைப் பார்த்து உரக்கச் சொன்னார்.

”ஜெய் ஹிந்த்!”

இது நடந்து வருடங்கள் ஓடி விட்டன. இந்த வருடம் அந்த கிராமமே முடிவு செய்திருந்தது.

சிறையில் நன்னடத்தை காரணமாகச் செய்த குற்றத்தின் பின்னணியும் கருதி, சிறையிலிருந்து வெளி வந்த நமது ஜனாதிபதியிடம்

இருந்து சிறப்பு விருது பெற்ற அந்த முன்னால் ராணுவ வீரர் போஸ் தான் நமது நாட்டின் 75 ஆவது சுதந்திர தினத்தில் அம்ருத் மஹோத்ஸவத்தில் அந்த கிராமத்து பள்ளி கூடத்தில் கொடி ஏற்றணும் என்று.

இது தான் என் தேசம்! நம் தேசம்!

ஜெய் ஹிந்த்

********************

# ராணுவ வீரன்



**பத்மா ராகவன்**

இன்றும் எதுவும் வேலை செட் ஆகவில்லை. சோர்வுடன் வீட்டுக்குத் திரும்பினான் குமரன். அம்மா இன்னும் வேலையிலிருந்து திரும்பவில்லை. வந்ததும் கேள்விக்குறியுடன் தன்னை நோக்கும் அம்மாவின் விழிகள், குமரனைப் பார்த்தவுடனேயே விஷயத்தைப் புரிந்து கொண்டுவிடும் என்பதை அவன் அறிவான். அந்த நினைப்பே அவன் மனதை பிசைகிறது. பெருமூச்சுடன் சுவரில் சாய்ந்து உட்காருகிறான்.

செல்லம்மாவுக்குத் திருமணம் ஆனபோது, அவள் கணவன் சிதம்பரம் பட்டாளத்தில் வேலை பார்த்தான். செல்லம்மாவின் அப்பாவுக்கு, அவளை பட்டாளத்தானுக்குக் கட்டிக் கொடுக்க ரொம்பத் தயக்கமா இருந்தது.



ஆனால் செல்லம்மாவுக்கோ தான் பட்டாளத்தானின் மனைவியாகப் போகிறோம்னு ஒரே பெருமை. சுபாவத்தில் அவள் தேசபக்தி நிறைந்தவள். நாட்டு சேவை செய்பவன் மனைவி ஆவது அவளுக்கு ஒரே பெருமை.

திருமணமாகி ஒரு மாதம் அவனுடன் இருந்த வாழ்க்கை சொர்க்கத்துக்கு நிகரானது. லீவு முடிந்து திரும்பிச் சென்றவன் மறு வருடம் பிள்ளை பிறந்ததும் பார்க்க வந்தான். திரும்பிப் போன சிலநாட்களில் எதிரியின் குண்டுக்குப் பலியான செய்திதான் வந்தது.

பட்டாளத்தார்களின் நிரந்தரமில்லாத வாழ்வைப்பற்றி

நன்கு அறிந்திருந்தாலும் தனக்கென்று வந்தபோது யாருக்குத்-தான் தாங்கும். அழுதாள், துடித்தாள்.

ஒருவாறு தேற்றிக்கொண்டு, தனக்குத் தெரிந்த தையல் வேலை, சமையல் வேலை செய்து பிள்ளையை படிக்க வைத்தாள்.

கணவன் இறப்பு மூலம் கிடைத்த தொகையை ராணுவ வீரர்களின் விதவை மனைவி சங்கத்துக்கு டொனேட் செய்து விட்டு சுயமாக பிள்ளையைப் படிக்கவைத்து கிராஜுவேட் ஆக்கிவிட்டாள். அவனும் வேலை தேடுகிறான். எல்லா இடத்திலுமே ஐம்பதாயிரம், ஒரு லட்சம் என்று டிபாசிட் கேட்கின்றனர். பாவம் அம்மா எங்கே போவாள்?

அதான் சோர்ந்து வந்து உட்காந்திருக்கான். திடீரென, அம்மா ரொம்ப காலமாக மேலே பரணில் தனக்குக் காண்பிக்காமல் வைத்திருக்கும் ஒரு பழைய தகரப்பெட்டி நினைவுக்கு வந்தது. அம்மா வீட்டில் இருந்தால் அதைத் திறக்க அனுமதிக்க மாட்டாள். அவள் வர இன்னும் நேரமாகும். என்னதான் இருக்குன்னு பாக்கலாம் என அதை மெள்ள கீழே எடுத்துத் திறந்தான்.

அதனுள் ஒரு ராணுவ வீரனின் மிலிட்டரி யூனிஃபார்ம். அத்துடன் அதை அணிந்த ஒரு ஆணின் புகைப்படம். அவன் அப்பா. அச்சு அசல் அவனைப்போலவே இருக்கார். இந்தப் புகைப்படத்தை செல்லம்மா

இதுவரை மகனிடம் காட்டியதே இல்லை. அத்துடன் சில கடிதங்கள்.

என்னதான் இருக்கும் என கடிதங்களைப் படிக்க ஆரம்பித்தான். திருமணமாகிச் சென்றபின் இருவரும் பறிமாறிக்கொண்ட பிரிவுத் துயர் நிறைந்த காதல் கடிதங்கள், ப்ரெக்னெண்ட் ஆனபின் இருவரும் எழுதிக் கொண்ட கடிதங்கள், பிள்ளை பிறந்தது என்றதும் அவனுக்கு தேசபக்தன் குமரன் பெயர் வைக்க இருவரும் முடிவு செய்த கடிதம், பிள்ளையையும் ராணுவ வீரனாக்க இருவரும் மேற்கொண்ட முடிவு பற்றிய கடிதம், பிள்ளையை வந்து பார்த்துப் போனபின் குழந்தை நினைவாகவே இருப்பது பற்றிய

கடிதங்கள் என அனைத்தையும் படித்து முடித்தான்.

கண்களிலிருந்து நீர் கரகரவெனக் கொட்டியது. ”பாவம் அம்மா. தனது துக்கத்தை, நான் வருந்துவேன் என்று வெளியே காட்டாமல் இந்தப் பெட்டிக்குள் பூட்டி வைத்திருக்கிறாளே, அப்பா அல்பாயுசில் இறந்து போனதால், அந்த நிலமை எனக்கும் வந்துடுமோன்னு என்னைப் பட்டாளத்துக்கு அனுப்பும் அப்பாவின் ஆசையைப் பூட்டி வைத்து விட்டாளோ? இந்த ராணுவ உடையைப் போட்டால் நான் அப்பாவைப் போலவே இருப்பேன் போல இருக்கே.”

இப்படியெல்லாம் யோசித்தபடி அந்த மிலிட்ரி ட்ரெஸ்ஸை எடுத்து

ஆசையுடன் மாட்டிக் கொண்டான்.

அவனுக்காகவே தைத்தமாதிரி கன கச்சிதமாகப் பொருந்தியது. அவன் உடலுள் மின்சாரம் பாய்ந்த மாதிரி உணர்வு.

“இதுதான் தேச பக்தியோ?”

தன் அழகைக் கண்ணாடியில் பார்த்தபடி, ”அப்பா அப்பா”, என கண்ணீர் வடித்தான்.

”இறந்த உங்கள் ஆசையை நிறைவேற்ற மனம் துடிக்கிறது. ஆனால் அம்மா விரும்பாத ஒன்றை எப்படிச் செய்வேன்? எனக்கு ஒன்றுமே புரியலையே?” என அரற்றியபடி திரும்பினால்...

கண்ணில் ஆறாகப் பெருகும் கண்ணீருடன் அம்மா நின்றிருந்தாள்.

சப்த நாடியும் ஒடுங்கியது குமரனுக்கு. ”இதுவரை அம்மா மனம் வருந்தும் எந்த செயலும் செய்யாத நான், இன்று அவள் வருத்தத்தைக் கிளப்பிவிட்டுவிட்டேனே. அம்மா வர இன்னும் நேரமாகும் என தப்புக் கணக்குப் போட்டுவிட்டேனே” எனத் துடித்தான்.

ஆனால் செல்லம்மாவோ நேரே சிதம்பரத்தின் படத்தின் முன் நின்று, ஆவேசத்துடன் ”ஜெய்ஹிந்த். நீங்கள் ஆசைப்பட்டபடியே இதோ ராணுவ வீரனாக நிற்கிறான் நம் மகன் குமரன். சந்தோஷமா?” என கூக்குரலிட்டாள்.

பயந்துபோன குமரன் அம்மாவை அணைத்து, ”சாரிம்மா. தெரியாம செஞ்சுட்டேன். உன் துக்கத்தக் கெளப்பிட்டேன். உனக்குப் பிடிக்காதத

செஞ்சுட்டேன்”, எனக் கெஞ்சினான்.

”டேய். ஒரு ராணுவ உடை அணிந்தவன் யாரிடமும் சாரி கேட்டுக் கெஞ்சக்கூடாது. இந்த உடையில் உன்னைப் பார்த்ததும் தான் நீ தேச சேவை செய்யப் பிறந்தவன் என்பது இந்த மரமண்டையில் உறைக்கிறது. உன் அப்பா சரியாத்தான் சொல்லிருக்கார். நீ நான் பெத்த பிள்ளை இல்லடா. இந்த பூமித்தாய் பெற்ற பிள்ளை. அவளுக்கு நீ சேவை செய்வதைத் தடுக்க நான் யார்? போ. இப்பவே கிளம்பு. பட்டாளத்தில் சேர என்னென்ன செய்யணுமோ எல்லாம் ரெடி பண்ணு. கிளம்பு.

உன் தாய் உனக்காகக் காத்திருக்கிறாள்”, என படபடவென்று

பேசி முடித்து அவனை இறுக அணைத்தாள்.

இதோ எழுபத்தைந்தாவது வருட சுதந்திர தின விழா பரேட் டெல்லியில் நடப்பதை, தொலைக்காட்சியில் பார்த்துக் கொண்டிருக்கிறாள்.

”அதோ. குமரன் அண்ணன். சிப்பாய்களுக்கு முன் நம் தேசிய கொடி பிடித்தபடி நடக்கிறார்” என பக்கத்துவீட்டு பையன் கத்தினதும்,

அடுத்த கொடி பிடித்த குமரனைப் பெற்று நாட்டுக்களித்த தாய் நெஞ்சம் பெருமிதத்தில் நிமிர்கிறது. சிதம்பரம் படத்தில் நிரந்தரப் புன்னகையுடன் கம்பீரமாக நிற்கிறார்.

ஜெய்ஹிந்த்!

********

# நன்றி

## சிறுகதைப் போட்டி நடுவர்கள்


Shri.A.Ravi


Smt. Bhanumathy Venkateswaran


Shri. Anantha Narayanan B


Smt. Revathi Kumar

## ஓவியர்கள்


Shri. Govindarajan Lakshminarayanan


Shri. Ravindar Ooty


Shri. Rajan Venkatasubramaniam


Smt. Subha Shankar
Competition Coordination


Smt. Bala Sivakumar
E-book Creation